நாட்டுப்பாடல் வெளியீடு—2

# முத்துப்பட்டன் கதை



பதிப்பாசிரியர் :

நா. வானமாமலை, எம்.ஏ.,எல்.டி.





மதுரைப் பல்கலைக்கழகம்

மதுரை—2

நாட்டுப்பாடல் வெளியீடு—2

# முத்துப்பட்டன் கதை




பதிப்பாசிரியர் :

நா. வானமாமலை, எம்.ஏ.,எல்.டி.





மதுரைப் பல்கலைக்கழகம்

மதுரை—2



# முத்துப்பட்டன் கதை

சாதி பரந்த மனித உணர்ச்சியை ஒடுக்குகிறது. அதன் கொடுமை உச்சத்திலிருந்த காலத்தில் அதற்குப் பலியானவர்கள் அநேகர். இவர்களில் தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்களே சாதியின் சொல்லொணுக் கொடுமைகளை அனுபவித்திருக்கிருர்கள்.

மானிட உணர்வு மாண்புடையது. அது சாதிக்குள் ஒடுங்கிக்கிடக்க மறுத்தபோது, பல வீரச்செயல்கள் விளைந்துள்ளன. காதல், உயர்ந்த மானிட உணர்வு. அது சாதிக் கட்டுக் கோப்பை மீறி முளைவிட்டுத்துளிர்த்து பெரிய விருட்சமான கதைகள் சிலவற்றை நாம் நாட்டுக்கதைப் பாடல்களில் கேட்கிருேம்.

இக்காதல் பாசத்தினுள் அகப்பட்டவர்களில் பலர் அதற் கெனவே சாதியை எதிர்த்து நின்று உயிர் விட்டனர். சிலர் வெற்றி பெற்று பிற்காலத்தில் காதலுக்காகவும் தங்கள் காதலியர் குடும்பங்களுக்காகவும் போராடி தியாக சீலர்களெனப் புகழ் பெற்று உயிர் நீத்தனர்.

மானிட உணர்வையும், மனித உறவுகளையும் நிலைநாட்ட, தீமையையும், பொய்மையையும், குறுகிய வெறிகளையும் எதிர்த்து வெற்றி பெற்ற வீரன் ஒருவனது சரித்திரமே முத்துப்பட்டன் கதையாகும்.

இக்கதை நெல்லை மாவட்டத்தில் இன்றும் வில்லுப்பாட்டாகப் பாடப்பட்டு வருகிறது.

இக்கதையை வில்லுப்பாட்டுச் சொல்லிச் செல்லும் போக்கை மாற்ருமலே நானும் எழுதி விடுகிறேன்.

பல வளம் வாய்ந்த ஆரிய நாட்டில் அந்தணர் குடும்ப மொன்றில் ஏழு சகோதரர்களுக்குப்பின் முத்துப்பட்டன் பிறந்தான். இளமையிலேயே சகல வித்தைகளிலும் வல்ல வனுனன். அவன் சத்தியத்தில் பற்றுடையவனுயிருந்ததால் அண்ணன் மாரோடு ஒத்துப்போகவும் தாய் தந்தையரோடு வாழவும் முடியவில்லை.

"சத்தியவான் முத்துப்பட்டன் தமையன் மாரோடே
சண்டை செய்து
மாதா பிதா வெறுத்து வஸ்துவகை தானிழந்து,
பிறந்த ஊர்தனைக் கடந்து பிறஊர்தனைப் போய்ச் சேர்ந்தான்.

ஊரை விட்டு வெளியேறிய முத்துப்பட்டன் கொட்டாரக் கரைக்குச் சென்முன். ராமராஜன் என்ற சிற்றரசனிடம் சேவகத்தில் அமர்ந்தான். சில வருஷங்கள் சென்றன. அவனுடைய சகோதரர்கள் அவனைத் தேடி எங்கெல்லாமோ அலைந்து விட்டுக் கடைசியில் கொட்டாரக் கரை வந்து சேர்ந்தார்கள். அங்கே மரத்தடியில் களைத்துப் போய் உட்கார்ந்திருந்தார்கள். தற்செயலாக அங்கு வந்த முத்துப்பட்டனைக் கண்டார்கள். அவனைக் கண்டதும் அவன் சீராக வாழ்கிறுன் என்பதைத் தெரிந்து கொண்டார்கள். அவனை அழைத்துச் செல்ல விரும்பினுர்கள்.

"தாயும் தகப்பனுரும் தவித்தல்லோ தேடுகிறுர்.
சேஷய்யர் பெண்ணையல்லோ சிறப்பூட்டக் கேட்டிருக்கு
திரவியங்கள் உண்டுமானுல் சீமைக்குப் போய்விடலாம்."

என்று அவனிடம் சொன்னுர்கள்.

முத்துப்பட்டன் அரசனிடம் விடைபெற்று அண்ணன் மாரோடு புறப்பட்டான். ஆரியன் கோவில், குளத்துப்புளி, சவரி மலை, ஆகிய ஊர்களைக் கடந்து பொதிகை மலை வழியே நடந் தார்கள். சொரிமுத்துப் பாதை வழியாகத் தளவாய்க் கொட்டகைக்கு வந்தார்கள். அங்கே சுமையிறக்கி வைத்துவிட்டு மாலை அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டார்கள். இரவு கழிந்த பின் மறுபடியும் புறப்பட்டார்கள். சில நாழிகைகளுக்குப் பின் முத்துப்பட்டனுக்குத் தாக முண்டாயிற்று. அரசடித் துறையில் நீர் குடிக்க இறங்கினுன். பூசையில் மூழ்கியிருக்கும் போது அவனுக்குப் பின்னுலிருந்து இனிய நாட்டுப் பாட்டின் ஒலி காற்றில் ஏறி வந்து, அவன் செவி வழியாக உள்ளத்தில் நுழைந்தது. திரும்பிப் பார்த்தான் அவன் கண்டதென்ன ?

"பட்டனும் பூசை செய்யப், பாவையர் ரெண்டுபேர்கள்
பெட்டியில் சோறும் கொண்டு பூச்சிநாய்தனைப் பிடித்து
பட்டணந்தனை விட்டு பசுக்கிடைக் கேகும் நேரம்
மட்டிலா தாகமுண்டாய் வந்தனர் தண்ணீர் தன்னில்"

"குனிந்தவர் தண்ணீர் கோரிக் குடித்துமே தாகம் தீர்ந்து
பணிந்துமே கிடைக்குப் போக பாவையர் பாடுமோசை
இனந் தெரியாமல் கேட்டு ஏங்கியே முத்துப்பட்டன்
வனந்தனில் சுத்தி ஓடி மறித்திட்டான் பெண்கள் தன்னை"

அவர்களை மறித்து அவர்களிடம் தன்னை மணந்து கொள்ளும் படி முத்துப்பட்டன் கேட்கிறுன். அவர்கள் மறுத்துப் பேசு கிறுர்கள்.

பட்டன்: பெண்ணே உன்னைப் பெற்ற தாய்தகப்பன் ஆரு சொல்லு
பேதமை கொள்ளாது சற்றே என்முன்னாக நில்லு,

பெண்கள்: பின்னே வழிவிட்டு ஓடணுமானாலும் கல்லு,
வேறே பரியாசஞ் சொன்னால் பறிப்போமே பல்லு,
சாம்ப சிவ நாதர் போலிருக்கிறீர் சுவாமி
சக்கிலிச்சி நாங்கள் தீண்டப் பொறுக்குமோ பூமி.

பட்டன்: ஆண்டவன் செயலினாலுங்களைப் பெற்றாளே மாமி,
அல்லாமல் வேறில்லை தாகந் தணிந்திட நேமி.

இவன் பேசிக் கொண்டிருக்கும்போதே அவர்கள் ஓடிக் காட்டுக்குள் மறைகிறார்கள். பட்டன் அவர்களைத் தேடி அலைந்தும் காணாமல் மயங்கி விழுந்து விடுகிறான்

ஓடிப்போன பெண்கள் ஆடு மேய்த்துக் கொண்டிருந்த தங்கள் தகப்பன், வாலப்பகடையிடம் போய் நடந்த விஷயத்தைச் சொன்னார்கள். அவன் வெகுண்டெழுந்து மாடறுக்கும் கத்தியைக் கையிலெடுத்துக்கொண்டு அரசடித்துறைக்கு வந்தான். அங்கே பட்டன் புழுதியில் மயங்கிக் கிடப்பதைக் கண்டான். அவனை யறியாமல் பட்டன்மீது இரக்கமுண்டாயிற்று. கையைத் தட்டிச் சப்த முண்டாக்கினான். பட்டன் எழவில்லை. சிறு கல்லொன்றை எடுத்து அவன் மீது எறிந்தான். பட்டன் கண் விழித்தான். "நீ யாரென்று" கேட்டான். வாலப்பகடை, தன் மக்களிருவரை ஒரு பார்ப்பான் மோசம் செய்ய முயன்றதாகவும் அவனைக் கண்ட துண்டமாக வெட்டி யெறியவே தேடிக் கொண்டிருப்பதாகவும் சொன்னான்.

"அந்த மொழி சொன்னவுடன் சக்கிலியன் என்றறிந்து
அப்போது முத்துப்பட்டன் முறை செப்புவான்
தாயுடன் கூடப் பிறந்த அம்மானே
சமர்த்திகளுக்காசைப்பட்டு ஓடிவந்தேனே."

என்று பட்டன் துணிந்து சொன்னான். மேலும்

"நாலு பேரறிய மணஞ் சூட்டிவைப்பாய் நாளை."

என்று முடிவாகக் கூறினான். அதைக் கேட்ட வாலப்பகடை வாயடைத்துப் போனான்; கால் பதறிற்று; நாஉளறிற்று; திக்கித் திணறிப் பேசினான். அவன் கோபமெல்லாம் ஆறிவிட்டது.

"நாயல்லவோ எங்கள் குலம் ஒ நயினாரே,
நாற்றமுள்ள விடக் கெடுப்போம் ஒ நயினாரே,

செத்த மாடறுக்க வேணும் ஒ நயினரே,
சேரிக் கெல்லாம் பங்கிட வேணும் ஒநயினரே,''

ஆட்டுத் தோலும் மாட்டுத் தோலும் அழுக வைப்போமே,
அதை யெடுத்து உமக்கு நன்ருய் அடியறுப்போமே,
அடியறுப்போம், சுவடு தைப்போம், வாரறுப்போமே
அதை எடுத்துக் கடைக்குக் கடை கொண்டு விற்போமே
சாராயம், கள் குடிப்போம் வெறிபிடித்தபேர்
சாதியிலே சக்கிலியன் நான் நயினரே.

என்று வாலப்பகடைகூறினன். அதைக் கேட்டபட்டன் உறுதியோடு சொல்லுகிருன்.

''கோபம் வேண்டாம் மாமனரே சொல்லக்கேளும் நீர்
கோடி கோடி தர்மமுண்டு உமது மக்களை
சாதி முறையாகத் தாலி கட்டி வைத்தக்கால்
தாய் தகப்பன் நீரல்லவோ இன்று முதலுக்கு
சாதி சனம் போல் நின்று வாரேன் குடிலுக்கு.''

என்று முத்துப்பட்டன் பதில் சொன்னன்.

அதைக் கேட்ட வாலப்பகடைக்கு முற்றிலும் ஐயம் நீங்க வில்லை. ஆகையால் அவன் ஒரு நிபந்தனை விதிக்கிருன். குடுமியை யும், பூணுலையும் களைந்து விட்டு, நாற்பது நாட்கள் சக்கிலியத் தொழில் செய்து செருப்பு விற்று வந்தால் தனது மக்களை அவனுக்கு மணம் செய்து வைப்பதாகக் கூறுகிருன். பட்டன் சம்மதியாமல் ஓடிவிடுவான் என்பதே அவன் எண்ணம். ஆனல் பட்டன் சம்மதிக்கிருன். அண்ணன்மாரிடம் சொல்லிவிட்டு அன்றே திரும்புவதாகக் கூறிச் செல்லுகிருன்.

பட்டன் தனது சகோதரர்களிடம் உண்மையைச் சொல்லு கிருன். அவர்கள் அவனுக்குப் புத்தி சொல்லுகிருர்கள். செத்த மாட்டைத் தின்னும் ''புலையன் வீட்டுப் பெண்ணை பிராம்மணன் மணம் செய்து கொள்ளலாமா?'' என்று கேட்கிருர்கள். 'மேல். சாதிக்காரர், பசு உயிரோடிருக்கும் வரை பாலை உறிஞ்சிவிட்டு செத்தமாட்டைத்தான் புலையருக்கு மிஞ்ச விடுகிருர்கள்'' என்று எதிர்த்துத் தாக்குகிருன் பட்டன். ''புழு பூச்சிகளையும், நண்டையும் தின்னும் சக்கிலியன் வீட்டுப் பெண்ணைப் பார்ப்பான் மணக்க லாமா?'' என்று அவர்கள் கேட்கிருர்கள். வயலில் விளையும் பயிரின் பயனை யெல்லாம் மேல் சாதிக்காரர்கள் அள்ளிச் சென்று விடுவதால் வயலில் மிஞ்சும், புழு பூச்சியும், நண்டும்தான் புலையருக்கு மிஞ்சுகின்றன,'' என்று பட்டன் குத்திக் காட்டுகிருன். விவாதிப்பதில் பயனில்லை யென்று கண்ட சகோதரர்கள் அவனை ஒரு கல்லறைக்குள் தள்ளி அடைத்து விடுகிருர்கள்.

அவர்கள் போன பின்பு, முத்துப்பட்டன் தந்திரமாகக் கல்லறையிலிருந்து தப்பி வந்தான். வரும் வழியில் குடுமியை அறுத்தெறிந்தான். பூணூலைக் களைந்தான். தோல் வாங்கிச் செருப்புத் தைத்துத் தோளில் மாட்டிக்கொண்டு சேரிக்கு வந்து சேர்ந்தான். மாட்டுக்கிடையை விட்டு ஊர் திரும்பிய வாலப் பகடை குடிசை வாசலில் இருந்த செருப்பைக் கண்டு திகைத்தான். பட்டனைக்கண்டதும் திகைப்பு மகிழ்ச்சியாக மாறிற்று. உடனே திருமணம் நிச்சயித்தான். உறவு முறையாரை அழைத்தான். இந்த அதிசயமான திருமண வைபவத்தைப் பாடகன் வாய் மொழியாகவே கேட்போம்.

"இனசாதிக்காரர் வள்ளுவனும், வந்து ஏற்ற முகூர்த்தமிட்டு,
இட்டாரே அத்திமரம் நாட்டி, ஆவரம்பூக் கொண்டு பந்தலிட்டு
மணவறையிட்டுப் பகடைகள்கூடி, வாய்த்த நல்ல பெண்களுக்கு
வளையுடன், பாசியும், காதில் பொன்னோலையும் மஞ்சள் பருக்கை பூசி
நெற்றியில் பொட்டு மையிட்டு மூக்குத்தி நத்தும் பொருந்தவிட்டு
வேடிக்கையாக இருபெண்கள் தன்னையும் நேசமாய்க் கூட்டிவந்து
வந்த பட்டனும் பெண்களையும் அந்த மணவறை தன்னில்வைத்து
மங்கிலியம் நிறைநாழியும் வைத்துக் கணபதி கொண்டுவைத்து
சந்திரன் சூரியன் தேவர்கள் சாட்சியாக முத்துப்பட்டன்
தாலியைப் பூட்டினான் பொம்மக்கா, திம்மக் காதம் கழுத்தில்
கழுத்தில் மாலையிட, பகடைகள் கலந்து குலவையிட
காப்புக் கையோடந்த மாப்பிள்ளைக்குப் பெண்கள் சாப்பாடு
கொண்டுவைக்க,
உறமுறையாகும் சடங்கு கழிந்தவுடனே விருந்தளிக்க
உற்ற நல்லபகடை யெல்லாம் மொத்தமாய்த் தாரைவார்த்தார்
தாரை வார்த்தவுடன் சக்கிலியப் பெண்கள் சகலரும்கூடி
சாதி முறைப்படி கும்மியடிக்கிற சத்தத்தைக் கேளுங்கள்."

அன்றிரவு பட்டன், திம்மக்கா மடியில் தலையும், பொம்மக்கா மடியில் காலும் வைத்துச் சற்றே கண்ணயர்ந்தான். பொல்லாத சொப்பனங்கள் கண்டான். கையில் கட்டிய காப்பு நாணை கரையான் அரித்ததாகவும், கோழிக் குஞ்சை வெருகுப்பூனை பிடித்து ஓடவும் கனவு கண்டான். கதவு தட்டிய ஓசை கேட்டுக் கண் திறந்தான். பகடைச் சிறுவனொருவன் வீட்டினுள் நுழைந்து வாலப்பகடையின் மாடுகளை, ஊத்துமலை வன்னியரும், உக்கிரங் கோட்டை வன்னியரும் களவு கொண்டு போனதாகவும் மறித்த வர்களை விரட்டி விட்டதாகவும் சொன்னான்.

சட்டென எழுந்து பட்டன், வல்லயத்தையும் தடியையும் எடுத்துக் கொண்டு, நாயையும் அவிழ்த்து விட்டுப் புறப்பட்டான்.

அவனது மனேவியர் காலேயில் செல்லலாம் என்றும் துணேயோடு போகலாம் என்றும் தடுத்தனர். தன்ஞல் ஏற்பட்ட வெறுப்பினுல் தான் வன்னியர், யார் தூண்டுதலாலோ, இவ்வாறு பழி வாங்கத் துணிந்தனர் என்று பட்டன் நிீனத்தான். ஆகவே யாரையும் துணேக்கு அழைத்துச் செல்ல அவன் விரும்பவில்லே. மறுநாட் காலேவரை பொறுத்திருக்கவும் விரும்பவில்லே. தனியே சென்ருன், நாய் மட்டும் தொடர்ந்தது.

சிறிது நேரத்தில் அவன் களவு போன மாட்டு மந்தையைக் கண்டான். அதை வளேத்துச் செல்லும் வன்னியரை எதிர்த்துப் போரிட்டான். பத்துப் பேர் இறந்தனர். ஒருவன் எங்கேயோ ஓடிவிட்டான். இப்போர் காட்சியைப் பாடகர் பின்வருமாறு வருணிக்கிருர்.

"வாள் கொண்டு வெட்டி மடிந்தார் சிலபேர்,
வல்லயத்தில் குத்தி மாண்டார் சிலபேர்,
ஊளேயிட்டுக் கொண்டு உருண்டார் சிலபேர்,
முட்டு மடிந்து கிடப்பார் சிலபேர்,
பட்டபின் வெட்டாதே என்பார் சிலபேர்."

போர் முடிந்தது என்று எண்ணிய முத்துப்பட்டன் உடலில் வழிந்த உதிரத்தைக் கழுவ ஆற்றங்கரைக்கு வந்தான். நாயும் வந்தது, முகம் கைகழுவ பட்டன் குனிந்ததும் முதுகில் ஒரு குத்து விழுந்தது. திரும்பிக் குத்தினவனே முத்துப்பட்டன் குத்திஞன். முத்துப்பட்டன் ஓடைக்கரையில் செத்து விழுந்தான். முதுகில் குத்தியவனும் சற்றுத் தொலேவில் விழுந்து இறந்தான். அவனேப் பாடகர், "சப்பாணி, நொண்டி, ஒளிந்திருந்தவன்" என்று இழிவாகக் கூறுகிருர்.

நாய் வீட்டுக்கு ஓடிற்று. குடிசை வாசலிலே கணவன் வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்த மனேவியர் நாயைக் கண்டு பதைத்தனர். அது அவர்களே அழைத்துக்கொண்டு காட்டினுள் ஓடிற்று. ஓடைக்கரையில் கணவனது உடலேக் கண்டனர். அதன் மேல் விழுந்து ஓலமிட்டு அழுதனர்.

"முகத்தோடே முகம் வைத்து முத்தமிட்டுக் கொண்டழுதார்
நாலு கழியலியே, நாலா நீர் கூடலேயே,
ஏழுகழியலியே ஏழா நீர் கூடலேயே,
தாலி கொண்டு வந்த தட்டானும் போகலேயே,
கொட்டிப் பறையனுக்குக் கொத்துக் கொடுக்கலேயே,
கோண மணவறையில் குந்த வைத்த தோஷமுண்டு
வட்டமணவறையில் வந்திருந்த தோஷமுண்டு

பொருந்தி இருந்தோமோ, பிள்ளைகளைப் பெற்றோமோ.
பணியாரம் சுட்டசட்டி பாதிமணம் போகலையே.
பந்தல் பிரிக்கலையே, வந்தஜனம் போகலையே,
எம்கணவா, எம்கணவா, இந்த விதி வருவானேன்?
சண்டாள வன்னியர்கள் சதித்தாரே கணவரைத்தான்''

பின்பு அவர்கள் பட்டனதுஉடலை மலையோரத்தில் இலைகளால் மூடிவைத்துவிட்டுக் கணவனோடு, தீப்பாய உத்தரவு கேட்க சிங்கம் பட்டி அரண்மனைக்கு வந்தார்கள். சிங்கம்பட்டி மன்னன் நடந்த தென்ன வென்று கேட்டான். அவர்கள்,

''...........மன்னு துணைவனும் உயர் குலத்தான்,
வல்லமையாகவே தான் மணஞ் செய்தார் எங்களைத்தான்
கள்ளரோடு யுத்தஞ்செய்து எம்கணவரும் மாண்டுவிட்டார்
வள்ளலின் பாதஞ்சேர வரம்தர வேணும்.''

என்று சொன்னார்கள், மன்னன் தன் அரண்மனையில் கவலையில்லாமல் தன் மனைவி மாரோடு வாழ அழைத்தான். அவர்கள்.

''மங்கிலியப் பெண்கள் எம்மை நகைப்பாரே,
வாலைப்பகடை நம்மை இதற்கோ வருந்திப் பெற்றான்?
சங்கடத்தைப் பார்ப்பதற்கோ, சண்டாளிகள் போய்வாரோம்.''

என்று சொல்லித் திரும்பினார்கள். மன்னன் மனமிளகி அவர்களை அழைத்துத் தீப்பாய அனுமதியளித்தான். சந்தனக் கட்டை யடுக்கி பூம்பந்தல் போட்டுக் கொடுத்தான். பட்டன் உடலில் பரவும் போது அவனது இருமனைவியரும் தீக்குளித்து உயிர் விட்டார்கள்.

ஆகாயத்திலுள்ள தேவர்கள் எல்லோரும் முத்துப்பட்டன், பொம்மக்காள், திம்மக்காள் ஆகிய மூவரையும் வாழ்த்தினார்கள்.

இதுவே பல்வேறு வடிவங்களில் வழங்கும் முத்துப்பட்டன் வில்லுப்பாட்டின் கதை. இக்கதை அச்சுப்புத்தக வடிவமாக வெளியிடப்பட்டுள்ளது. இக்கதைப்பாடல் நெல்லையில் வழங்கும் வில்லுப்பாட்டு ஏடுகள் சிலவற்றை ஒப்பு நோக்கி எழுதப்பட்டது.

# முத்துப்பட்டன் கதை-ஆராய்ச்சி

தமிழிலக்கிய வரலாற்றில் காலத்தைத் நிர்ணயிப்பது மிகவும் கடினமான காரியமென்பதை யாவரும் அறிவர். நாட்டுப்பாடல்களின் காலத்தைக் கணிப்பது இலக்கியப்படைப்புகளின் காலத்தை நிர்ணயிப்பதைவிடக் கடினமானதே சமீபத்தில் நடந்த நிகழ்ச்சிகளைக்கூட பலவாருகத் திரித்துக் கதையாக்கும் போக்கு இன்றும் இருக்கிறது. ஆயினும் இக்கதையின் நிகழ்ச்சிகள் குறிப்பிடும் காலம் எது வென்பதைச் சில சான்றுகள் கொண்டு நிர்ணயிக்கமுடிகிறது.

காலம்: வில்லுப்பாட்டு, முத்துப்பட்டனைப் பற்றிக் கூறும் விவரங்கள் வருமாறு: அவன் தென் ஆரிய நாட்டில் பிறந்தான். அவன் கொட்டாரக்கரையில் ராமராஜன் அரண்மனையில் பணிபுரிந்தான் அவன் சகோதரர்களோடு ஊர் திரும்பும்போது, ஆரியங்கோவில், சவரிமலை, பொதிகைமலை வழியாகத் தனவாய்க் கொட்டகைக்கு வந்தான். பாபநாசத்தருகிலுள்ள அரசடித் துறையில் நீர் குடித்தான். அவனது மனைவியர், சிங்கம்பட்டி மன்னனிடம் தீக்குளிக்க அனுமதி கேட்டனர். சம்பவங்கள் நிகழ்ந்த இடங்களை இச்செய்திகள் குறிப்பிடுகின்றன.

இச்சம்பவங்கள் நிகழ்ந்த பகுதி இன்று திருநெல்வேலி மாவட்டத்தின் ஒரு பிரிவாகவும், கேரள மாநிலத்தில் ஒரு பிரிவாகவும் காணப்படுகிறது. மேல் மலைத்தொடரின் தென் பகுதியில் கொண்ட நிலப்பகுதி இருபிரிவிலும் உள்ள சிற்றூர்களனைத்தும் ஆரிய நாடு என்று அழைக்கப்பட்டது.

இதற்குக் குற்ருலக் குறவஞ்சியில் சான்று உள்ளது. பொதிகைமலைக் குறத்தி தன்னுடைய நாட்டைப் பற்றிக் கூறும் போது, குற்ருலம் உள்ளிட்ட மேல் மலை நாட்டை, 'திருக்குற்ருலர் தென் ஆரியநாடு' 'கடவுள் ஆரிய நாடெங்கள் நாடே' என்று வருணிக்கிருள். கர்நாடக ராஜாக்கள் சரித்திரத்திலும் இப்பகுதி 'ஆரிய நாடென்று குறிப்பிடப்பட்டுள்ளது. நாயக்கமன்னர் சாசனத்தில் தென்காசி முள்ளி நாட்டின் தென்பால் ஆரிய நாடு என்று இப்பகுதி குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பகுதி கடந்த 350 வருஷங்களாக திருவனந்தபுரம் அரசர்கள் ஆட்சியில் இருந்து வந்தது. மார்த்தாண்ட வர்ம ராஜாவும் தளவாய் ராமமையனும் மலையாள ராஜ்யங்களை இணைத்து டச்சுக்காரரை எதிர்க்கும் சமயத்தில்

மலையாளப் பகுதியிலுள்ள தனித்தனிச் சிற்றரசுகள் திருவிதாங்கூரோடு இணைந்துவிட்டன. குற்றாலக்குறவஞ்சி இந்நாட்டை ஆரிய நாடு என்றழைக்கிறது என்று முன்னர் குறிப்பிட்டேன். குறவஞ்சி யாசிரியர், குறவஞ்சி பாடியதற்காக, மதுரை மன்னர் சொக்கநாத நாயக்கரிடம், நிலம் மானியமாகப் பெற்றுள்ளார். அப்பொறுப்புப் பட்டயத்தில் "சாலிவாகன சகாப்தம் 1640க்கு சொல்லா நின்ற கொல்லம் 891ம்ஶு தைமாதம் 11ந் தேதி ராஜமானிய ராஜ ஸ்ரீ முத்துவிஜய ரெங்க சொக்கநாத நாயக்கரவர்களோம்; திருக்குத்தாலம் ராஜப்பன் கவிராயருக்குப் பொறுப்புப் பட்டயம் எழுதிக் கொடுத்தபடி" என்ற சொற்றொடர் காணப்படுகிறது. ஆகவே பட்டயத்தின் காலம் 1718-கி. பி. என்று தெரிகிறது. கதையில்வரும் தலைவியர் இருவரும் வாலப்பகடையின் மக்கள். பகடைகள் தெலுங்கு மொழிபேசும் சக்கிலியர். சக்கிலியர் பெரும் அளவுக்குத் தமிழ் நாட்டுக்கு வந்த காலம் எது? கிருஷ்ண தேவராயன் தஞ்சை மீதும், மதுரை மீதும் படையெடுக்க தனது தளவாய்களை அனுப்பினான். அவர்கள் தஞ்சையையும், மதுரையையும் கைப்பற்றினார்கள். கிருஷ்ண தேவராயனது காலத்திலேயே விஜய நகர ஆட்சி சீர்குலைந்தது. மதுரைத் தளவாய் விசுவநாத நாயக்கன் சுயாதிகாரம் பெற்ற மன்னனானான். அவனுடைய சேனைகளோடு தமிழ்நாடு வந்தவர்களே, சக்கிலியர்கள், அவர்கள் நாயக்கர் சேனைகள் தங்கியிருந்த இடங்களில் செருப்புத் தைத்துக் கொடுத்து வந்தார்கள். மூடநம்பிக்கையுள்ள நாயக்க மன்னர்கள், கோயில் கட்டும்பொழுதும், அணைகள், பாலங்கள் கட்டும் பொழுதும் நரபலி கொடுப்பதுண்டு. அதற்காக இழிந்தவரெனக் கருதப்பட்ட சக்கிலியர்களைப் பிடித்துச் சிறையிலடைத்துப் பலமுறை பலி கொடுத்தார்கள். உயிருக்குப் பயந்து அவர்கள் ஓரிடத்தில் தங்காமல் சிதறினார்கள். அவ்வாறு சிதறியவர்கள் திருநெல்வேலி மாவட்டம் என்று இன்றழைக்கப்படும் பகுதியில் பல சிற்றூர்களில் குடியேறினார்கள். குடியேறியவர்கள் தங்கள் பரம்பரைத் தொழிலைச் செய்து பிழைத்தார்கள். இவ்வரலாற்றைக் கவனிக்குமிடத்து, மதுரையில் திருமலை நாயக்கன் கட்டிடப் பணிகள் நடத்திய காலத்திற்கு முன்னர் சக்கிலியர் தென் தமிழ் நாட்டில் பரவினார்கள் என்று கருதலாம். கட்ட பொம்மன் கதையில் அவனுடைய முன்னோர்கள், திருமலை நாயக்கனிடம் நரபலி கொடுப்பதற்காக சிறையிலடைக்கப்பட்டிருந்த சக்கிலியர்களை மீட்க வாதாடினார்கள் என்றும், திருமலை நாயக்கனும் அதற்கிணங்கினான் என்றும் ஒரு செய்தி கூறப்பட்டுள்ளது. இது மேற்கண்ட கருத்தையும் வலியுறுத்தும். திருமலை நாயக்கன் கட்டிடப்பணிகள் செய்த காலம் சுமார் 1623 முதல் 1655 வரை.

அப்படியானுல் சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர் சக்கிலியர் தமிழ் நாட்டில் நாயக்கர் ஆட்சி பலமாக வேரூன்ருத இடங் களுக்குக் குடி பெயர்ந்திருக்கவேண்டும். ஆரிய நாடு நாயக்கர் ஆட்சியின் கீழ் இல்லை. ஆகவே பகடைகள் அல்லது சக்கிலியர்கள் அங்கு குடியேறி வாழ்ந்தார்கள் என்று எண்ணினுல் தவறெதுவும் இல்லை. எனவே முடிவாக 260 வருஷங்களுக்கும், 300 வருஷங் களுக்கும் இடைப்பட்ட காலத்தில் இச்சம்பவங்கள் நடந்திருக் கலாம். (கி. பி. 1658—1738)

ஆனுல் 260 வருஷங்களுக்கு முன் பாடப்பட்ட குறவஞ்சியில், குறத்தி குறி சொல்லும்போது தெய்வங்களை அழைக்கும் கட்டத்தில்,

"செப்பருமலைமேல் தெய்வ கன்னியர்தான்,
ஆரியங்காவா, அருட் சொரிமுத்தே!"

என்ற அடிகள் உள்ளன. இதனேடு முத்துப்பட்டன்கதையில் வரும் காப்புச் செய்யுளை ஒப்புநோக்குவோம்.

"துட்டரை யடக்குகின்ற சொரிமுத்து ஐயன்வாசல்
பட்டன்மேல் வரவு பாட பால முக்கணன் காப்பாமே."

சொரிமுத்து என்பது பாபநாசத்தில்சொரிமுத்தையன் கோவில் குடிகொள்ளும் தெய்வம். குற்ருலக் குறவஞ்சி ஆரிய நாட்டையும், சொரிமுத்து என்ற பெயரையும் குறிக்கிறது. காப்புச் செய்யுளும் சொரி முத்தையன் வாசல் பட்டன் என்று கூறுகிறது. வாசல் என்பது வாசலில் காவலுக்கு நிறுத்திய தெய்வம். அது இன்றும் கோவிலுக்கு வடக்கேயுள்ள பட்டவராயன் கோவிலில் இருக்கிறது. அங்கே ஒரு ஆண் உருவச் சிலையின் பக்கத்தில் இரண்டு பெண் சிலைகளும் உள்ளன. பட்டவராயன் சிலை முத்துப்பட்டனையும், பெண்ணுருவச் சிலைகள் மனைவியர் பொம்மக்காவையும், திம்மக்கா வையும் குறிப்பனவாகும்.

கோயிலுக்குள் சிவலிங்க மொன்று இருக்கிறது. அதன் பெயர் மகாலிங்கம். அதனிரு புறத்திலும் பூதத்தார் சிலையும், சொரி முத்தய்யர் சிலையும், உள்ளன. இச் சொரி முத்தய்யரே, குறவஞ்சி யிலும், பல வில்லுப் பாட்டுக்களிலும், குறிப்பிடப்படுகிருர். அவருக்குக் கொடுக்கப்பட்டுள்ள அடைமொழி 'வல்லவர் சொரி முத்தய்யர்' என்பன. இவற்றைக் காணும்போது பட்டவராயன் கதை பரவிய போதே சொரி முத்தய்யர் கோவில் புகழ் பெற் றிருந்தது என்று கருதலாம்.

இக் கோவிலின் வணங்கப்படும் ஐயனூர் மலையாளிகளும் தமிழர்களும் வணங்கும் தெய்வம். கோயில் தோன்றி சுமார் 400 ஆண்டுகள் இருக்கலாம் கதை நிகழ்ச்சிகள் 400 ஆண்டுகளுக்குப் பின்னரும், 300 ஆண்டுகளுக்கு முன்னரும் உள்ள காலத்தைக் குறிக்கின்றன.

## உண்மையா? கற்பனையா?

காலத்தைக் குறித்த ஆராய்ச்சியில் 300 வருடங்களுக்கும் 400 ஆண்டுகளுக்கும் இடைப்பட்ட காலத்தில் இக்கதையின் நிகழ்ச்சிகள் நடந்திருக்கலாமென்று கூறினோம். இக்கதை கற்பனைக் கதையா? உண்மையை அடிப்படையாகக் கொண்டதா என்ற கேள்விக்கு விடை காண்போம்.

புராணக் கதைகளில் தெய்வீக சக்திகளால் நிகழும் நிகழ்ச்சிகள் பல வருகின்றன. மனித சக்திக்கு அப்பாற்பட்ட சில சக்திகளின் தலையீட்டால் கதை நிகழ்ச்சிகள் இயக்கப்படும். இராமாயணத்தில் தேவர்கள் முறையீட்டால் அரக்கர்களை அழிக்கத் திருமால் இராமனாக அவதரித்தார். இராமனுடைய சக்தி தெய்வீக சக்தி. அதை எதிர்த்து நிற்க எந்தச்சக்தியாலும் இயலாது. வில்லுப் பாட்டுக்களிலும், இத்தகைய சக்திகள் செயல் படுவதாகக் காட்டும் கதைகள் உள்ளன. உதாரணமாக 'பழைகை நல்லூர் இசைக்கி கதையில் காதலியைக் கொலை செய்த கோயில் பூசாரி செட்டியாகவும், கொலை செய்யப்பட்ட கோவில் முறைக்காரி (தாசி) சோழன் மகள் நீலியாகவும் தோன்றி, மறு ஜன்மத்தில் அவனை அவள் பழி வாங்குகிறாள் என்றும் கூறப்படுகிறது. இதுவும் "விதி" என்னும் இயற்கை விதிகளுக்கு அதீதமான சக்தியின் வலிமையால் வாழ்க்கை இயக்கப் படுகிற தென்ற நம்பிக்கையால் எழுந்த கதையே. இக் கொள்கைகள் நிலப்பிரபுக்கள் தங்கள் உயர்வுக்கும், உழவர் தாழ்வுக்கும் விதியையும், தெய்வ சித்தத்தையும் காட்டி ஏமாற்றுவதையே. குறிப்பிடும்.

இயற்கைக்கு அதீதமான, தெய்வீகச் செயல் எதுவும், பட்டன் கதையில் இல்லை. 300 ஆண்டுகளுக்கு முன்பிருந்த சமூகச் சூழ்நிலையில் செயல் பட்ட சக்திகளைக் காட்டுவதில் பட்டன் கதை நாமறிந்த சரித்திர உண்மைகளினின்றும் மாறுபடவில்லை. ஆரிய நாடு இருந்தது. பகடைகள் அக்காலத்தில் இப்பகுதியில் வாழ்ந்திருக்க முடியும். சமூக வேறுபாடுகளைப் பாதுகாக்க, உழைப்பவரைக் கீழ்ப்படியில் மிதித்துவைக்க, சதிகளையும், கொலைகளையும், நில உடைமையாளர்கள் நீகழ்த்தியதும் உண்மையே. வேறொரு வில்லுப்பாட்டு, "சின்னத் தம்பி கதையும்" இதற்குச்

சான்று. சின்னத் தம்பி, தனது வேட்டைத் திறமையால் பயிரை அழிக்கும் விலங்குகளைக் கொன்று புகழ் பெற்று, பல இளைஞர்களுக்குத் தலைவனாக சமூக அந்தஸ்தில்உயர்ந்து விட்டான்; சக்கிலியனுக்கு அந்த அந்தஸ்து கூடாது. என்றெண்ணி நிலப்பிரபுக்கள் அவனைச் சதி செய்து கொன்று விட்ட கதைதான் அது.

இக் கதையில் வரும் பாத்திரங்கள் கற்பனை பாத்திரங்களாக இல்லை. உண்மையில் வாழ்ந்தவர்களாக கதைப் பாத்திரங்களின் அமைப்பில் தோன்றுகிறது. சமூக உண்மை கதை முழுவதும் ஊடுருவி நிற்கிறது. முத்துப்பட்டன் பொய்ம்மையை எதிர்த்தவன். சாதியைத் துறந்தவன். அது மட்டுமல்ல. தான் சேர்ந்துவிட்ட குலத்துக்காக உயிர் விட்டவன். தன்னால் பெண் கொடுத்த குலத்துக்கு அழிவு வராமல் பாதுகாக்க தன்னுயிர் கொடுத்தவன். அவனைக் காமப்பித்தன் என்று வருணிக்கச் சிலர் முயலுகிறார்கள். அவன் அண்ணன்மாரிடம் வாதாடுவதையும், செருப்புத் தைத்து விற்று, பகடைகளது சமூக வாழ்க்கையில் இரண்டறக் கலந்து விட்டதையும் மறைக்க அவர்கள் முயலுகிறார்கள். ஆனால் வில்லுப் பாட்டுப் பாடப்படும் உருவில் இவை யெதையும் மறைக்க முடியாது.

மேலும் தற்காலத்தில் சொரி முத்தையன் கோவிலில் நடக்கும் தீக்குளிப்பு வைபவமும் இக்கதையின் நிகழ்ச்சிகள் உண்மையென்பதை அடையாள பூர்வமாக காட்டுகின்றன. இந்த வைபவத்தின் போது பட்டவராயன் கோவில் முன்பு ஒரு வண்டி விறகை எரிப்பார்கள். கோமரத்தாடிகள் (தெய்வ ஆவேசம் கொண்டு ஆடுபவர்கள்) தணலில் இறங்கி மறுபுறம் செல்வார்கள். அவர்கள் தீறல் இறங்கு முன்பு சிங்கம்பட்டி ஜமீன்தாரிடம் பாசிக் கொத்து வாங்கி அணிந்து கொண்டு செல்வார்கள். இந்த வழக்கம் எதற்கு அடையாளமாகக் காணப்படுகிறது? பாசிக் கொத்து சக்கிலியர்களின் தாலி. இதை அணிந்து செல்லும் அம்மன் கொண்டாடிகள் பொம்மக்கா, திம்மக்கா. ஆகிய இருவரையும் உருவகப்படுத்துகிறார்கள், தீயிலிறங்குவது, உடன் கட்டையேறியதைக் குறிப்பிடுகிறது. சிங்கம்பட்டி ஜமீன்தார் பாசிக்கொத்து அளிப்பது, அவருடைய முன்னோர் ஒருவர் உடன் கட்டையேற அனுமதியளித்ததைக் குறிக்கும்.

## பட்டவராயன் கோயில்

பொதிகை மலை மேல் தற்போது காரையாறு அணை கட்டியுள்ள இடத்திலிருந்து ஒன்றரை மைல் தூரத்தில் பட்டவராயன் இருக்கிறது. இது சொரி முத்தையன் கோயிலுக்கு வடக்கே உள்

ளது. இக்கோயினுள் மூன்று சிலைகள் உ ளன, ஒன்று பட்டவ ராயன் சிலை, இடுப்பில் சல்லடம், ஒரு கையில் வல்லயம், மற்றென் றில் சூர்க்கத்தி, தலையில் முண்டாசு, முறுக்கி விட்ட மீசை, சாய்ந்து விழுவது போன்ற நிலை மொத்தத்தில் கலைத் திறன் மிக்க சிற்பி தன் ஆர்வமுழுவதையும் கொட்டிச் செதுக்கியுள்ளது போலத் தோற்றமளிக்கிறது. ஒரு பக்கத்தில் திம்மக்கா, இடுப்பில் ஒரு கூடை. ஒரு கை கூடையை அணைத்திருக்கிறது. இச்சிலை பட்டவ ராயன் சிலைக்கு மற்றொரு புறமுள்ள பெண்ணுருவச் சிலையைவிட சற்றே உயரமானது: மறுபுறம் இருக்கும் சிலை பொம்மக்கா. அவள் கையில் ஒரு கலசம். மற்றொரு கையில் 'பொந்தந்தடி' என்ற கதை போன்றதடி. இரண்டு சிலைகளும் மிக அழகாகச் செதுக்கப் பட்டுள்ளன.

வன்னியரை எதிர்த்துச் சண்டை செய்யும்போது பட்டன் உபயோகித்ததாகச் சொல்லப்படும் ஈட்டியும், ;வல்லயமும் கோயி லினுள் சார்த்தி வைக்கம்பட்டுள்ளன. அவை போன்ற பல ஈட்டி களும் வல்லயங்களும், நேர்த்திக் கடனாக மக்கள் அளித்திருக் கிறார்கள். அவை கோயிலுக்கு வெளியே இருக்கின்றன. பட்டன் சிலைக்கு அருகே இரண்டு நாய்களின் உருவங்கள் இருக்கின்றன. அவற்றைப் பூச்சி நாய், காட்சி நாய், என்று சொல்லுகிறார்கள்.

இக்கோயிலின் முன்னுள்ள பாறையில் இக்கோயில் தோன்றிய காலம் 999 ஸ்ரீ என்று பொறிக்கப்பட்டுள்ளது. இது கொல்ல மாண்டு சுமார் 150 வருஷங்களுக்கு முன் இக் கோயில் தோன்றியது என விளங்குகிறது. மற்றொரு கல்வெட்டு இக் கோயில் சிங்கம் பட்டியாரால் கட்டப் பட்டதென்று கூறுகிறது, இக்கோயில் கட்டுமுன் இக்கோயிலில் உள்ள சிலைகள், இக்கோயில் இருக்கும் இடத்திற்குச் சுமார் நான்கு மைல் கீழேயுள்ள சுளிய முத்து பட்டவராயன் கோயிலில் இருந்த தாகவும், அது மிகவும் பழைமையான கோயில் எனவும், அதுவே ஆதிப்பட்டவராயன் கோயில் எனவும் கூறுகிறார்கள். இவ்விரண்டு கோயில்களுக்கும் நேர்த்திக் கடனாகச் செருப்புகளைச் சேர்ப்பிக் கிறார்கள். இது கவனத்துக்குரியது.

மலையில் பல பகுதிகள் இக்கதையின் நிகழ்ச்சிகளோடு சம்பந் தப் படுத்திப் பெயரிடப்பட்டுள்ளன. கோயிலுக்குக் கிழக்கேயுள்ள இடம் 'பசுக்கிடைவிளை' என்றழைக்கப்படுகிறது. இங்கே தான் வாலப்பகடையின் பசுக்கிடை இருந்ததாம். இப்பொழுதும் இங்கே பசுக்கிடை இருக்கிறது. 'கச்சை கட்டி முடுக்கு' என்றொரு மலைப்பாதை இருக்கிறது. இங்குதான் வன்னியருக்கும் பட்ட

னுக்கும் சண்டை நடந்ததென்று சொல்லுகிறார்கள் 'கச்சை கட்டு' என்றால் சண்டைக்கு தயார் செய்தல் என்பது பொருள் "படுகளப் பாறை" என்ற பாறையில் தான் பட்டன் இறந்து விழுந்து ஓடைக் கரையில் உருண்டான் என்று சொல்லுகிறார்கள். "அரசடித் துறை" அல்லது "பூசைத்துறை" என்பது பட்டவராயன், பொம் மக்காவையும் திம்மக்காவையும் பார்க்கு முன் பூசைசெய்துகொண் டிருந்த இடமென்று சொல்லப்படுகிறது.

இவ்வளவு விவரமாக இடங்கள் கட்டிக் காட்டப்படுகின்றன சக்கிலியர்களும், தொட்டியர்களும் வாழ்ந்த இடமும் "தொட்டி யர் வலசை" என்று சுட்டிக்காட்டப்படுகிறது, இவையாவும் எதனைக் காட்டுகின்றன? இக்கதை உண்மையான கதையென் பதையே வலியுறுத்துகின்றன.

இதற்கு மேல் சில செய்திகளை 100 வயது நிறைந்த சிங்கம் பட்டி, சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள் கூறினார்கள்.

வாலப்ப கடையும் அவனது உறவினர்களான சக்கிலியர்களும் நீலகண்டன் என்ற தொட்டியனது மேற்பார்வையின் கீழ் மலைக் காவல் புரிந்து வந்தார்களென்றும், அவர்களே மலையிலுள்ள மாட் டுக்கிடைகளைக் காவல் காத்து வந்தார்களென்றும் சிங்கம்பட்டியில் வசித்துவந்த சுப்பிரமணியக் கவிராயரவர்கள் என்னிடம் கூறி னார்கள். மேலும் இந்த நீலகண்டனையும், அவனைச் சேர்ந்தவர் களையும், கொன்றுவிட்டுத்தான் நல்ல குட்டி என்பவன் சிங்கம் பட்டிப் பாளையத்தை நிறுவினான் என்றும் கூறுகிறார்கள். நீலகண் டன் கொல்லப்பட்டான் என்பதற்கு "நீலகண்டன் கசம்", "நீலகண் டன் "தலை வெட்டிப்பாறை" என்ற பெயர்கள் சான்றாகக் காணப் படுகின்றன. இதே நீலகண்டன்தான் வில்லுப்பாட்டிலும்,

"காக்க வேணும் பொதிகாசல
மென்று கட்டுடனே வாரார்!
வந்து திரு நீலகண்டனைக் கண்டு
கடவினை தானும் விட்டு"

என்று குறிப்பிடப்படுகிறான். பட்டவராயன் கதை நிகழ்ச்சிகள் நடக்கும் காலத்தில் அவன் வாழ்ந்திருக்கிறான். அப்படியானால் பட்டவராயன் கொல்லப்பட்ட சில ஆண்டுகளுக்குப் பின்னர் நல்ல குட்டி திருநீலகண்டனைக் கொன்று சிங்கம்பட்டியை ஸ்தாபித் திருக்கவேண்டும். சிங்கம்பட்டியை நல்லகுட்டி ஸ்தாபித்தது சுமார் 350 வருஷங்களுக்கு முன்புதான் என்று தெரிகிறது. அப்படியானால் இச்சம்பவங்களும் சற்றேறக் குறைய அதே காலத் தில் நிகழ்ந்திருக்கக் கூடும்.

இனி இக்கதை எவ்வாறெல்லாம் வழங்குகிறது அவற்றுள் சரித்திர நிகழ்ச்சிகளுக்குப் பொருத்தமானது எது என்று காண் போம்.

## கதை வேறுபாடுகள்

முதற் பகுதியில் கூறப்பட்டுள்ள "பெரிய முத்துப்பட்டன் கதை'' என்ற அச்சுக் கதைப்பிரதியில் போக்கு எவ்வாறிருக்கிறது என்பதைக் குறிப்பிட்டேன். இவற்றைத் தவிர சில முக்கிய மாறு தல்களைக் கொண்ட கதையுருவங்களும் வழங்கி வருகின்றன. அம்மாறுதல்கள் எவை என்று காண்போம்.

முதன் முதலில் முத்துப் புலவர் என்னும் வில்லுப் பாட்டுப் புலவர் பாடி வரும் வில்லுப் பாட்டைக் கவனிக்கலாம். அவரு டைய பாட்டின்படி, பொம்மக்காவும், திம்மக்காவும் பிறப்பில் சக்கிலியப் பெண்கள் அல்லர், அவர்களுடைய பிறப்பு விசித்திர மானது. ஒரு பிராமணர் வீட்டில் பசு வொன்று இரவோடு இரவாய் எருக்குழிக்குள் விழுந்து இறந்தது. அவர் காலையில் அதைக் கண்டு பசுவை இறந்ததைக் கண்ட பாவத்தைத் தொலைக்கக் காசிக்குப் போய் விட்டார். அவர் மனைவி பாவந்திர உபவாசங்களிருந்து சிவபிரான் அருளால் இரட்டைக்குழந்தைகளைப் பெற்றாள். இவற்றைத் தான் வளர்த்தால் ஊரார் பழி தூற்றுவார் களென்று காட்டில் விட்டு விடச் செய்தாள். காட்டில் ஒரு நாகம் குழந்தைகளைக் காப்பாற்றிற்று. வாலப்பகடையும் அவன் மனைவியும் அவ்வழி போகும்பொழுது குழந்தைகளைக் கண்டெடுத்து வளர்த்தனர்.

இவ்வாறு பல இடங்களில் வில்லுப் பாட்டு பாடப்படுகிறது. முத்துப் புலவரையே சந்தித்து இதைப் பற்றிக் கேட்டேன். அவர் வெளிப் படையாக உண்மையைச் சொல்லி விட்டார். அவருக்கு முன் அவருடைய தகப்பனும், அவருக்கு முன் அவருடைய பாட்டனும், வில்லுப்பாட்டுப் பாடி வந்தார்களாம். அவர்கள் தான் பட்டவராயன் கோவிலுக்கு வழக்கமாக வில்லடிக்குப் போவார்களாம். மூவரும் பொம்மக்காவும், திம்மக் காவும் பகடையின் மக்களென்றே பாடி வந்திருக்கிறார்கள். ஆனால் 25 வருஷங்களுக்கு முன்னால் சிலபிராமணர்களும், உயர் சாதிக்காரர் களும் கதையை ஆட்சேபித்தார்களாம். பிராமணன் சக்கிலியப் பெண்களைக் கலியாணம் செய்து கொள்ளும் கதை என்ன கதை என்று கேலி செய்தார்களாம். சொரிமுத்து ஐயர் கோவிலுக்கு மேல் சாதிக்காரர்கள் அதிகமாக வருவதால், இக்கதையை மாற்ற வேண்டுமென்றெண்ணி முத்துப்புலவர் அவ்வாறே மாற்றி விட்டா

ராம். உண்மையில் பொம்மக்கா திம்மக்கா இருவரும் சக்கியப் பெண்கள் தாமென்று அவர் சொன்னுர்.

கதையின் உயிர் நாடியே "கீழ் சாதியில்" பட்டன் மணம் செய்து கொண்டது, அவர்கள் வாழ்க்கையில் இணைந்து ஒன்று பட்டது, அவர்களது நலனைப் பாதுகாக்க உயிர் விட்டது, ஆகியவையே. அவனை வீரனுக்குவது அவனது மனிதத்துவம். அதை விடுத்து அவனைச் உயர்சாதிக்குள் அடைத்து விதி வலிமையால் அவன் சக்கிலியனுல் வளர்க்கப்பட்ட முயற்சி செய்திருக்கிறுர்கள் சாதி வெறியர்கள் கொண்டான என்று இக் கதை கூறுது மேலும் விதியின் வலிமை' என்ற அவர்களது கொள்கையையும், ஜன்மப் பூர்வபலன்' என்ற கொள்கையையும், இக் கதையினுள் நுழைத்து விட்டார்கள். ஏன் அவர்கள் அப்படிச் செய்தார்கள்? பட்டவ ராயன் பண்பு உயர்ந்த பண்பு. அவன் இலட்சிய புருஷன் என்று உழைக்கும் மக்கள் கருதினுர்கள். கூட்டம் கூட்டமாகக் கோயி லுக்கு வந்தார்கள். வில்லுப்பாட்டு பரவிற்று. இதைக் கண்ட நிலப்பிரபுக்களும், அவர்களுடைய நண்பர்களான சாதி வெறியர் களும் கதையை மாற்ற விரும்பினுர்கள். மூலக் கதையின் ஜீவனைப் போக்கிவிட விரும்பினுர்கள். இம்மாறுதலின் மூலம் உயிரைப் போக்கடித்தும் விட்டார்கள். ஆனுல் அவர்கள் முயற்சி வெற்றி யடைய வில்லை. 200 வருஷங்களில் கதை உழைப்பாளி மக்கள் மத்தியில் நன்கு பரவி விட்டதால் புதுக்கதை எடுபடவில்லை உண்மையைத் தங்கள் பிற்போக்குக் கொள்கைகளுக்கு ஏற்ப மாற்ற அவர்கள் செய்த முயற்சி வெற்றியடைய வில்லை.

முத்துப் புலவர் உண்மையைக் கூறியதற்காக நாம் அவருக்க நன்றி செலுத்த வேண்டும். அவருடைய குடும்பத்தினர்தான் வெகு காலமாக முத்துப்பட்டன் கதையை வில்லுப்பட்டாகப்பாடி உயிரோடு வைத்திருக்கிறுர்கள். அவர் உண்மையான கதையைச் சொல்லும் போது சம்பவங்கள் நடப்பது போல் கண் முன் காண முடிந்தது. அவர் சொன்ன கதையில் சில அம்சங்கள் அச்சுப் பிரதியோடு வேறு படுகிறது. ஆனுல் இவ்வேறுபடும் அம்சங்களே உண்மை என்று சுப்பிரமணியக் கவிராயரும் கூறுகிறுர்கள். நமக்கும், நாமறிந்த சமூக—சரித்திரச் சூழ் நிலைகளில் அவை நாம் உண்மை யென்று நம்பத் தோன்றுகிறது.

அச்சுப் பாட்டிலிருந்து முத்துப்புலவர் கதை வேறுபடும் அம்சங்கள் பின் வருமாறு;

1 சக்கிலியப் பெண்கள் முத்துப் பட்டனைக் கண்டு ஆசைப் பட்டார்கள். வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்கப்.

தங்களையறியாமல் பாடிவிட்டார்கள். முத்துப்பட்டன் திரும்பி வழி மறித்தான்.

2. பெண்கள் ஓடிப்போய் தங்கள் தகப்பனிடம் நடந்ததைக் கூறினார்கள். அவன் தன் பெண்களோடு வந்தான். மூர்ச்சையாகிக் கிடக்கும் பட்டனைக் கண்டான். பட்டன் எழுந்து வாலப்பகடையிடம் அவர்களை மணம் செய்து வைக்கக் கோரினான். வாலப்பகடை இத்தகைய திருமணத்திலுள்ள கஷ்டங்களை எடுத்துச் சொன்னான். பட்டன் பிடிவாதமாகக் கேட்கவே பகடை தங்கள் பாஷையைப் படிக்க வேண்டும், தொழிலைக் கற்க வேண்டும். தங்களுடைய வாழ்க்கை முறைகளைப் பின்பற்ற வேண்டும்—என்று நிபந்தனை விதித்தான்.இந்தநிபந்தனைகளை நிறைவேற்ற நாற்பது நாள் தவணை விதித்தான். சரி யென்று பட்டன் ஒப்புக் கொண்டான்.

இவ்விஷயத்தில் கவிராயர் சொல்லும் கதை சற்றே வேறு விதமாயிருக்கிறது. அவர் சொல்வது; பெண்களைப் பின் தொடர்ந்த பட்டன் பகடைகளிடமே நேரில் போய்ச் சேர்ந்தான். அவர்கள் அவனை வரவேற்றனர். உடனே "மான் துறைக்கிடை" என்ற இடத்தில் திருமணம் நடந்தது.

இது இயற்கைக்கு விரோதமாகக் காணப்படுகிறது. விவாதம் எதுவுமில்லாமல் பகடை பெண் கொடுக்க எப்படிச் சம்மதிப்பான்? எப்படி நம்புவான்? மூலக்கதை சொல்லும் நாற்பது நாள் கெடு விதித்ததுதான் நம்பத்தகுந்ததாக உள்ளது.

3. வாலப் பகடை மூன்று வருஷங்களுக்குப்பின் இறந்து போனான். அவனோடு அவனுக்கு உதவியாகப் பட்டன் தொழில் செய்து வந்தான். செருப்புத் தைத்தான். கிடையைக் காவல் புரிந்தான். துஷ்டமிருகங்களால் சல்லியம் இல்லாமல் அவற்றைத் தனது நண்பர்களோடு வேட்டையாடிக் கொன்றான். பகடைக்குப் பின் இவனே தலைவனானான். "பட்டவராயன்" என்று பெயரும் பூண்டான். மலையாளத்துக்குப் போகும் பொதிமாட்டுப் பாதையை வணிகர்களுக்காகப் பாதுகாத்தான். கள்வர் பயமும், துஷ்ட விலங்குகளின் உபத்திரவமும் இல்லாமல் வணிகர்களின் வியாபாரப் போக்கு வரத்துக்கு வசதி செய்து, அவர்கள் தங்கவும் வசதி செய்து கொடுத்தான். அவ்விடம் "குறுப்பிலாக்காவு" என்று அழைக்கப்படுகிறது. குறும்பில்லாத காடாக அவ்விடத்தை அவன் மாற்றினான். சிறிது காலத்திலேயே புகழ் பெற்றான்.

அச்சுப்பாட்டில் கலியாணமான அன்றே அவன் இறந்ததாக சொல்லப்படுகிறது. முத்துப் புலவரின் கதைதான் உண்மையாக

இருக்க வேண்டும். ஏனெனில் அச்சில் உள்ள வில்லுப்பாட்டில் சண்டைக்குப் போகும் பட்டனோடு வாலப் பகடை செல்லவில்லை. மறு நாள் கூட தன் மக்களோடு இறந்த மருமகனைக் காணச்செல்ல வில்லை. கலியாணத்திற்குப் பின் அவனைப்பற்றிய பேச்சே இல்லை. நாடோடிப் பாடல்களில் இவ்வாறு முக்கிய கதா பாத்திரங்களை நட்ட நடுவில் மறந்து விடுவது மரபல்ல. சின்னத் தம்பி கதையில் மகன் இறந்ததை அறிந்த, தாய், மணம் பேசி வைத்திருந்த சோனைச்சி, தகப்பன் ராமப்பகடை, அனைவருமே உயிர்விடுகிறார்கள் அவனுடைய நாய் கூட உயிர் விடுகிறது. ஆகையால் வாலப்பகடை உயிரோடிருந்தால் அவனது முடிவுபற்றிக் கட்டாயம் வில்லுப் பாட்டு சொல்லியிருக்கும். பகடை இறந்து விட்டானென்றும், இறந்தபின் முத்துப்பட்டன் இனத்தாருக்கும் உழவர்களுக்கும், வணிகர்களுக்கும் செய்த நன்மைகளைப் பற்றி முத்துப்புலவர் வில்லுப்பாட்டில் பாடுகிறார். சுப்பிரமணியக் கவிராயரும், வாலப் பகடை இறந்த பின்தான் கொள்ளை நடந்தது என்று சொல்லு கிறார்கள்.

5. கொள்ளை நடத்தியவர்கள் வன்னியக் கரந்தை தேவர்கள் என்று முத்துப் புலவரும், சுப்பிரமணியக் கவிராயரும் ஒருமுக மாகச் சொல்லுகிறார்கள். காரணம் கேட்டபோது அவர்கள் கூறியது இதுதான்: அவர்கள் தேசத்தில் 11 வருஷப் பஞ்சம் ஏற்பட்டது. அவர்கள் உக்கிரங் கோட்டைப் பாளையக்காரர் தங்கள் சாதியைச் சேர்ந்தவன் என்று புகலிடம் கேட்டார்கள். அவன் அவர்களைப் பொதிகை மலைக் கிடைகளைக் கொள்ளையடிக்க ஏவித் தானும் ஆட்களை அனுப்பினான். அவருக்கும் பங்கு கொடுப்ப தென்று உடன் படிக்கை ஆயிற்று.

மேற் கூறிய விவரம் இருவரும் கூறியது. தேவர்கள் முதற்கால மன்னர்களிடம் படை வீரர்களாக இருந்து நிலத் தொடர்பை இழந்து விட்டார்கள். பாண்டியராட்சி மறைந்து நாயக்கர் ஆட்சி ஏற்பட்டபின்னர், அவர்களில் பெரும் பாலோர் பிழைக்க வழி யின்றி கூட்டம் கூட்டமாகக் கொள்ளையடிக்கத் தொடங்கினார்கள். திருமலை நாயக்கர் காலத்தில் அழகர் மலைத் திருடர்களை அடக்க ''மதுரைவீரன்'' உதவினான் என்று மதுரை வீரன் கதை கூறும். "வன்னியன் கதை'' ''பட்டன் கதை'' இவற்றிலும் இவர்கள் கொள்ளையடித்தது கூறப்படுகிறது. இத்தகைய ஒரு கூட்டத்தை உண்டாக்கியது பலவீனமான நிலப் பிரபுத்துவமே. அவர்களுக்குத் தொழில் கொடுத்து, நிலம் கொடுத்துப் பிழைக்க வழி செய்ய நிலப்பிரபுத்துவ ஆட்சியால் முடியவில்லை. ஒரு சில நிலப்பிரபுக்கள் கொள்ளைக் கூட்டங்களை ஆதரித்து, பெரும் பணம் திரட்டினார்கள்.

நாளா வட்டத்தில் இந் நிலப்பிரபுக்களிடம் இவர்கள் காவல்காரர் களாக அமர்ந்தனர்.

6. கடைசியாக உடன் கட்டையேறத் தீய்ப்பாவதற்கு சிங்கம் பட்டி அரண்மனையில் தீ கேட்க பட்டனின் மனைவியர் சென்றார்க ளென்றும், அரசர் தம்மோடு அரண்மனையில் தங்கக் கேட்டுக் கொண்டதாயும், அவர்கள் மறுத்தபின் சிதையடுக்கி பட்டனைத் தகனம் செய்ய ஏற்பாடு செய்ததாகவும் அச்சுப்பாட்டு கூறுகிறது. ஆனால் முத்துப் புலவரும் சுப்பிரமணியக் கவிராயரும் இது உண்மையல்ல என்று கூறுகிறார்கள். முத்துப் புலவர், "உடன் கட்டை ஏற யாரிடமும் கேட்க வேண்டாம், பட்டன் இரவில் இறந்தார். பக்கத்திலுள்ள சக்கிலியர் விக்கிரமசிங்கபுரம் போய்த் தகவல் சொன்னார்கள். பசுக்களுக்குடைய கோனார்களும் வேறு உழைப்பாளிகளும் ஓடி வந்தார்கள். பெண்களுக்குக் காணியளிப் பதாகச் சொன்னார்கள். அவர்கள் கேட்கவில்லை. உடன் கட்டை யேறினார்கள்."

சுப்பிரமணியக் கவிராயர் வேறொரு காரணத்தால் இது நடந்திருக்க முடியாதென்று சொல்லுகிறார். ஏனென்றால் பட்டன் கதை நிகழ்ச்சிகள் நடந்த காலத்தில் சிங்கம்பட்டி ஜமீனே தோன்ற வில்லை. முன்னரே இதற்குரிய சான்றுகளை நாம் பார்த்தோம் நீலகண்டன் வாழ்ந்த காலம்தான் பட்டன் இறந்த காலம். நீலகண் டனைக் கொன்றுதான் சிங்கம்பட்டியை நல்லகுட்டி நிறுவினான். அப்படியானால் சிங்கம்பட்டியாரிடம் எப்படி பட்டனது மனைவியர் தீ கேட்டிருக்க முடியும்?

## கதா பாத்திரங்களின் இயல்புகள்

சென்ற பகுதியில் வில்லுப்பாட்டு அச்சுப்பிரதிக்கும், வில்லுப் பாட்டு பரம்பரையாகப் பாடப் பெற்று வருவதற்கும், கர்ண பரம் பரைச் செய்திகளுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்ந் தோம். கதை நிகழ்ச்சிகளில் மேற் கூறிய இரண்டு மூலங்களிலும் சிற்சில வேறுபாடுகள் இருக்கின்றன என்று காண்போம். முத்துப் புலவர் தற்போது பாடிவரும் பொம்மக்கா,—திம்மக்கா—வரலாறு புதுப்புனைவு என்பதை அவரே ஒத்துக் கொள்கிறார் என்றும் கண்டோம். பரம்பரையாக அவரது குடும்பத்தில் பாடப் பெற்று வந்த வில்லுப்பாட்டில் கதையின் விறுவிறுப்புக்காவும், கேட்போர் மனதில் உணர்ச்சியைத் தூண்டுவதற்காகவும், சிற்சில மாறுதல்கள் அங்கும் இங்கும் செய்யப்பட்டுள்ளன. ஆனால் கதையின் தலைவனான முத்துப்பட்டன் தலைவியரான பொம்மக்காள், திம்

மக்காள் மற்றும், இதர கதாபாத்திரங்களான வாலப்பகடை, பட்டனின் சகோதரர்கள், வன்னியர்கள் ஆகியோரின் பண்புகளை மூன்று மூலங்களும் ஒரே விதமாகத்தான் சித்தரிக்கின்றன.

இவற்றின் காரணம் என்ன? வில்லுப்பாட்டு உழைக்கும் மக்களின் சிருஷ்டி. கர்ணபரம்பரைச் செய்திகள் உழைக்கும் மக்களிடையே வழங்கி வருவன. அச்சுப் பிரதியும், இவைகளுக்கு முரண்படாத கதைப் போக்கைக் கொண்டுள்ளது. உழைப்பாளி மக்கள் சரித்திர நிகழ்ச்சிகளை எந்தக் கண்ணோட்டத்தோடு கண்டார்களோ மனித இயல்புகளை எவ்வாறு மதிப்பிட்டார்களோ, அதே அடிப்படையில்தான் இம்மூன்று மூலங்களும் மதிப்பிடுகின்றன. ஆகவே தான் கதா பாத்திரங்களின் இயல்புகள் மூன்று மூலங்களிலும், ஒன்று போல் வருணிக்கப்பெற்றுள்ளன.

## முத்துப்பட்டன் இயல்பு

வில்லுப் பாட்டு முத்துப்பட்டனின் குண நலங்களை எப்படி மதிப்பிடுகிறது? அவன் சக்கிலியப் பெண்களை மணந்து கொண்டதால் அவனைச் சாதி கெட்டவன், முறைமை கெடுத்தவன், சண்டாளன் என்று ஏசுகிறதா? அல்லது அவனது மனிதத்துவத்தையும், துணிவையும் உறுதியையும், தியாகத்தையும் போற்றுகிறதா?

வில்லுப்பாட்டு அவனது பெயரைக் குறிப்பிடும் இடத்தில் எல்லாம் அவனைப் புகழ்ந்து பேசுகிறது. உதாரணமாக "சத்தியவான்முத்துப்பட்டன், "ஏற்ற ஆரிய முத்துப்பட்டன்," "சோதி முத்து," "பேர் அழகன்முத்துப்பட்டன்,""உத்தமமுத்துப்பட்டன்", "சுவாமி முத்துப்பட்டன்" என்றே பேசுகிறது. அவனை முன்பின் காணாத வாலப்பகடை அவனை முதன் முதலில் கண்டதும் இந்திரனோ, தேவனோ, மன்மதனோ, மாயனோ, ஏகச் சக்ராதிபனோ?" என்று நினைக்கிறான், வில்லுப்பாட்டு முதலிலிருந்து கடைசி வரை முத்துப்பட்டனைப் போற்றியே பேசுகிறது.

அவ்வாறு போற்றுவதற்குக் காரணமான இயல்புகள் எவை? முதலிலேயே வில்லுப்பாட்டு அவனது கல்வி அறிவைப் பற்றிக் கூறிவிட்டு, அவன் சத்தியவான் என்றும் கூறுகிறது. "சத்தியவான்" முத்துப்பட்டன் தமையன்மாரோடு சண்டை செய்து பிறந்த ஊர்தனைக் கடந்து பிற ஊரில் போய்ச் சேர்ந்தான் என்று சொல்லுகிறது. தமையன் மாரோடு முத்துப் பட்டன் ஏன் சண்டை செய்தான் என்ற காரணம் தெளிவாகக் கூறப்படவில்லை. ஆயினும் சத்தியவான், தமையன்மாரோடு சண்டை செய்வதற்கு என்ன காரணம் என்பதை நாம் யூகித்துக் கொள்ளலாம். அவர்கள் படித்த படிப்பும், அவர்களுடைய அறிவும்

பொய்ம்மையின் சேவைக்குப் பயன்பட்டன போலும்! அதனால் தான் முத்துப்பட்டன் குடும்பத்தை விட்டுக் கொட்டாரக் கரைக்கு வந்துவிட்டான். இந்தச் சம்பவம் அவன் உண்மைக்காக உறுதியாக நிற்பான் என்பதை முன் கூட்டிச் சூசகமாக அறிவிக்கிறது.

அவனுடைய வாழ்க்கையில் புதிய தடத்தை ஏற்படுத்துவது அவனது காதல். இக்காதல் தொடங்கும் கட்டத்தை வில்லுப் பாட்டு சிறந்த கலை உணர்வோடு கையாளுகிறது. பூஜை செய்து கொண்டு இருந்த பட்டன், பெண்கள் பாடும் ஓசையைக் கேட்டான். சக்கிலிச்சி என்ன பாட்டுப் பாடுவாள்? பாரதி "கூட்ட முதப் பாட்டு" என்று வர்ணித்தாரே, அந்தக் கும்மியா? சுண்ணம் இடிக்கும் பாட்டா? பள்ளியர் பாட்டா? தெம்மாங்கா? எந்தப்பாட்டென்று வில்லுப்பாட்டு சொல்லாவிட்டாலும் அது நிச்சயமாக ஒரு நாட்டுப் பாட்டாகத்தான் இருந்திருக்க வேண்டும். முத்துப் பட்டன் பிராமணன். இதுவரை இம்மாதிரியான பாட்டைக் கேட்டிருப்பானோ, என்னவோ? படிப்பாளியான அவன் உழைப் பாளி மக்களின் நாடோடிப் பாடலைக் கேட்டு அதில் மனம் பறி கொடுத்தான்.

முதன் முதலில் உழைப்பாளி மக்களின் கலை அவனது உள்ளத்தைக் கவர்ந்தது. பின்னர்தான் உழைப்பாளி வர்க்கப் பெண்கள் அவனது உள்ளத்தைக் கவர்ந்தார்கள். அவனது உள்ளத்தில் தோன்றிய காதல் இன்று பெருகி நாளை வற்றும் காட்டாற்று வெள்ளம் அல்ல. வாழ்க்கை முழுதும் நிலைத்திருக்கக் கூடிய, வாழ்க்கையில் எத்தகைய தியாகத்தையும், பெரிதாகக் கருதாத ஆழ்ந்த உணர்ச்சி அது. வாலப்பகடை தனது மக்களை "மோசம் செய்ய வந்த பார்ப்பானே, இரண்டு துண்டாக வெட்டுவேன்." என்று கத்தியைக் காட்டிச் சொல்லும்போதும் முத்துப் பட்டன் உயிருக்கு பயப்படவில்லை. தன்னை அறிமுகப் படுத்திக் கொள்ளவும் தயங்கவில்லை,

"தாயுடன் கூடப் பிறந்த ஆசை அம்மானே
சமர்த்திகளுக்கு ஆசைப்பட்டு ஓடிவந்தேனே
பூசை விட்டு பொருள் விட்டு என் மனந்தானே
பெண்ணாசைப்பட்ட பாவி நானே
தாய் வெறுத்தேன் தமையன் இழந்தேன்
உன் மக்களை நான் வெறுத்தால்
எந்தன் உயிர் மாண்டிடுந்தானே
பேய் பிடித்தானைப் போலாகி விட்டேன்

நான் பிழையேன் சக்கிலியா,
உன் மக்களை
நாலுபேர் அறிய மாலை சூட்டிவைப்பாய் நாளை

இவ்வாறு பட்டன் கோபமாக இருக்கும் வாலப் பகடையிடம் கூறு கிறான். அவனது துணிச்சலையும், மன உறுதியையும் கண்டு வாலப் பகடைக்குக் கோபம் தணிகிறது. இவ்விவாகம் நடைபெறு வதற்கு இடையூறாகவுள்ள காரணங்களையெல்லாம் வாலப்பகடை முத்துப்பட்டனிடம் எடுத்துக் கூறுகிறான். தங்களுடைய இழி வான வாழ்க்கையைப் பற்றி வருணித்து அது பிராம்மணனுக்கு ஏற்புடையதாகாது என்று சொல்லுகிறான்.

ஆனால் முத்துப்பட்டன் மனம் மாறவில்லை. அவனது மனத் திண்மை தளரவில்லை. அவன் உறுதியாகச் சொல்லுகிறான்.

கோடி கோடி தர்மமுண்டு உனது மக்களை
சாதி முறையாகத் தாலி கட்டி வைத்தக்கால்,
சகல தொழிலும் உங்கள் கூடச் செய்வேன் நான்
தாய் மாமன் அல்லவோ இன்று முதலுக்கு,
சாதி சனம் போலே நின்று வாரேன் குடிலுக்கு.

வாலப்பகடை இத்திருமணத்திற்கு நிபந்தனைகள் விதிக்கிறான். முத்துப்பட்டன் சக்கிலியர்களைப் போலவே உடை தரித்துக் கொள்ளவேண்டும். தோல்வார் இடுப்பில் கட்டிக் கொள்ள வேண்டும். குடுமியை சிரைத்து விடவேண்டும். பூணூலை அறுத் தெறிய வேண்டும். நண்டுக்கறி உண்டு, கள் குடிக்க வேண்டும். தினந்தோறும் ஒரு சோடி செருப்புத் தைத்துக் கொடுக்கவேண்டும். ஆடு மாடு மேய்த்து வரவேண்டும்.

எல்லா நிபந்தனைகளையும் முத்துப் பட்டன் ஒப்புக் கொள்ளு கிறான். தமது குலப் பெருமையின் அடையாளங்களான பூணூலை யும், குடுமியையும் நீக்கிவிடுகிறான். கணுக்கால்வரை தாழ்ந்திருக்கும் வேட்டியை முட்டுக்கு மேல் உயர்த்திக் கட்டிக் கொள்ளுகிறான். தனது காதலியருக்காக சாதி மேன்மை உணர்வை ஒதுக்கித்தள்ளு கிறான். அது மட்டுமல்ல, இச் செயல்கள், ஏமாற்றும் வெளிப்படைச் சின்னங்களைக் கைவிட்டு அவன் உழைப்பவர் இனத்தில் ஒன்றாக முனைந்து விட்டான் என்பதற்குச் சான்றுகள். இவை வெளிப் படை அடையாளம் மாத்திரமல்ல. அவன் அவர்களுக்கு இடையூறு நேர்ந்தபோது உயிர் விடவும் தயாராகிறான். உடல் நலமின்றி இருந்தும் தனது இனத்தாரின் விரோதிகளை எதிர்த்து தன்னந் தனியாகப் போராடி உயிர் நீத்தான்.

மானிடப் பேருணர்வின் சிகரமாக அவனை உழைப்பாளி மக்கள் போற்றினார்கள். இன்றும் போற்றி வருகிறார்கள். இத்தகைய மானுடத்தின் சிறந்த பிரதிநிதியாகவே வில்லுப்பாட்டு முத்துப்பட்டனைச் சித்திரிக்கிறது.

## மனைவியர் இயல்பு

பொம்மக்காவும், திம்மக்காவும் பட்டன் மீது காதல் கொண்டனர். ஆனால் அவன் அவர்களை அணுகிப் பேசும் பொழுது தங்கள் சாதிச் சிறுமையைக் கூறி அவ்வேண்டுகோளை மறுத்தனர்.

"சாம்ப சிவ நாதர் போலிருக்கிறீர் சாமி
சக்கிலிச்சி நாங்கள் தீண்டப் பொறுக்குமோ பூமி"

என்று அவர்கள் கூறுகிறார்கள். கீழ் சாதிக்காரிகள், மேல் சாதிக்காரனை மணம் செய்து கொள்வது தர்மம் அல்ல என்றும், தர்மம் தப்பினால் பூமி பொறுக்காது என்றும் அவர்கள் நம்பினார்கள். உள்ளன்பு அவன்மீது இருந்தபோதிலும் அதைக் காட்டிக்கொள்ளாமல் தங்கள் தகப்பனுக்குத் தெரிந்தால் மோசம் வரும் என்று பயமுறுத்தினார்கள். ஆயினும் தங்கள் தகப்பன் விதித்த நிபந்தனைகளை எல்லாம் பட்டன் ஒத்துக் கொண்டு நிறைவேற்றி வைத்து அவர்களை மணம் செய்ய வந்த போது அவர்களது மனம் பூரித்தது. மனம் ஒத்த தம்பதிகளை வாழ்த்தி,

"மன்மதனும் ரதி தன்மையும் போலவே
வகுத்தானே பாவி பிரம்மனுந்தான்"

என்று சக்கிலியப் பெண்கள் கும்மி அடிக்கிறார்கள். இப்பொழுது பொம்மக்காளும், திம்மக்காளும், தங்களுடைய திருமணத்தை தர்மம் தவறியது என்று கருதவில்லை. தங்கள் குல ரட்சகனாகவே பட்டனைக் கருதுகிறார்கள். அவன் மறவர்களோடு சண்டைக்குப் போகும் பொழுது அவர்கள் அவனைத் தடுத்தது அவர்களது அன்பைத் தெளிவாகக் காட்டுகிறது. அவன் மறுத்த பொழுது தாங்களும் அவனோடு வருவதாகச் சொல்லுகிறார்கள். இது அவர்களுடைய வீரத்தையும் காட்டுகிறது. முத்துப் பட்டன் சண்டைக்குப் புறப்பட்டுச் சென்ற பிறகு அவர்கள் பல தீய கனவுகள் காண்கிறார்கள். அவற்றுள் ஒன்று "குடிசையில் தீப்படவும், கொட்டாரம் வைக்கவும் கணவு கண்டேன்," என்பது. இதனால் உக்கிரங் கோட்டை ஜமீன்தாரது சூழ்ச்சியால் தான் கணவனுக்கு இச் சங்கடங்கள் நேரும் என்று தோன்றுகிறது. கணவனைத் தேடிச் செல்லும்போது அவர்கள் பாடும் சோக கீதமும் அவனது உடலைக் கண்டு அரற்றி அழும் ஒப்பாரியும் உருக்கமாயிருக்கின்றன. திருமணத்திற்கு மூன்று

வருஷங்களுக்குப் பின்புதான் முத்துப் பட்டன் இறந்தான் என்ப தற்குச் சான்றுகள் உள்ளன. என்றாலும் அவன் திருமணம் ஆன அன்றே இறந்தான் என்று வில்லுப்பாட்டுப் பிரதி கூறும். பட்டன் மனைவியர்மேல் நமக்கு எழும் அனுதாபத்தை அதிகமாக்கவே இந்த உத்தியை வில்லுப்பாட்டுப் புலவர் கையாண்டிருக்கிறார் போலும்;

கர்ண பரம்பரைச் செய்திகளும் முத்துப் புலவர் வில்லுப் பாட்டும் சொல்லாத ஒரு செய்தியை அச்சுப் பிரதி கூறுகிறது, அதுதான் பட்டன் மனைவியர் இருவரும் சிங்கம்பட்டி ஜமீன் தாரிடம் தீப்பாய உத்தரவு வாங்கச் சென்றது. இச்சம்பவம் நடந்திருக்கக் கூடியதல்ல என்பதைக் காரணங்களோடு ஏற்கனவே விளக்கியிருக்கிறேன். சிங்கம்பட்டியாருக்குச் சிறப்பு அளிக்க நினைத்த யாரோ ஒரு புலவர் இதைப் பாட்டில் நுழைத்திருக்கலாம் என்றும் முன்பே கூறினேன். இப் பகுதி இடைச் செருகலாக இருப்பினும் அதில் கதைத் தலைவியரின் பண்பு நலன்களைக் குறைத் துக் கூறவில்லை. கணவனை இழந்த ஏழைப் பெண்களை ஆசை நாயகிகளாக ஆக்கிக் கொள்ள நினைக்கும் ஜமீன்தாரை முகத்தில் அறைந்தாற் போல் பேசிவிட்டு அவர்கள் திரும்புவதாகவே இப் பகுதி கூறுகிறது. அவர்களுடைய கற்பு நிலையையும் உறுதியையும் இப்பகுதி பாராட்டவே செய்கிறது.

## அண்ணன்மாரது பண்பு

பாட்டின் ஆரம்பத்திலேயே முத்துப்பட்டனது தமையன் மார்கள் அவனைப் போன்றவர்கள் அல்லர் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. அவர்கள் அவனை வீட்டிற்கு வருமாறு அழைக்கும் போது கூட தம்பியை விட பணத்தின் மீது அவர்களுக்கு ஆசை இருப்பது தெரிகிறது.

பட்டன் தாகவிடாய் தீர்க்கச் சென்றிருந்த பொழுது அவர்கள் தங்கியிராமல் விக்கிரம சிங்கபுரத்தில் சந்திக்கும்படி சொல்லிச் சென்று விடுகிறார்கள். இக்கட்டத்தில் வில்லுப் பாட்டு அவர்களைப் "பொருளாசை கொண்ட பட்டர்" என்று கூறுகிறது. கலியாணம் செய்து கொள்ளப் போகும் செய்தியை அவர்களிடம் முத்துப்பட்டன் சொன்னவுடன் அவர்கள் தங்கள் குலப் பெரு மைக்கு இழிவு வரும் எண்றெண்ணி கல்லறைக்குள் தள்ளி அடைத்து விடுகிறார்கள். சாதி வெறியும் பணத்தாசையும், அவர் களது சகோதர பாசத்தைக் கொன்று விடுகின்றன. "சாதி கெட்ட" பட்டனைக் கொல்லவும் தயங்காத அவர்கள் பட்டன் சம்

பாதித்த பணத்தை மட்டும் வீடு கொண்டு செல்லத் தயங்கவில்லை. சாதி உயர்வின் பொய்ம்மையை இக் கூட்டத்தில் வில்லுப்பாட்டு நையாண்டி செய்கிறது. அச்சுப் பிரதியில் இல்லாத ஒரு பகுதி சில பாட்டுக்காரர்கள் பாடும் பாட்டில் இருக்கிறது. அதில் பட்டனுக்கும், அவனது தமையன்மாருக்கும் நடக்கும் சம்பாஷணை அடங்கியுள்ளது. அவர்கள் சக்கிலியர் இனத்தை, செத்த மாடு தின்பவர்கள், நத்தை தின்பவர்கள் என்று பழிக்கிறார்கள். பட்டன் அவர்களது இழி நிலைமைக்கு உயர்ந்த சாதிக் காரர்களே காரணம் என்று வாதிக்கிறான். பசு உயிரோடிருக்கும் வரை ஒரு சொட்டு விடாமல் மேல் சாதிக்காரர்கள் உறிஞ்சி விடுவதால் செத்த மாடுகள்தான் சக்கிலியர்களுக்கு கிடைக்கிறது என்று அவன் சொல்லுகிறான். இவ்வாறு உழைப்பவர்களது இழிவு நிலைமைக்கு உயர்ந்த நிலையிலுள்ளவர்களே காரணம் என்று பட்டன் குற்றம் சாட்டுகிறான்.

## வன்னியர் பண்பு

வன்னியர்கள் முத்துப் பட்டனைக் கொன்றவர்கள். பசுக்களைக் கொள்ளை கொண்டு சென்றவர்கள். ஆயினும் அவர்களைப் பற்றி கண்டனமாக ஆசிரியர் கூற்று எதுவும் இல்லை. பட்டனது மனைவியர் அழுது புலம்பும் போது தான் "சண்டாள வன்னியர்கள் சதித்தாரே கணவரைத் தான்" என்று வருகிறது. எய்தவனிருக்க அம்பை நோவதில் பயனென்ன என்று பாடகர் கருதினார் போலும்! ஆயினும் அவர்களில் நேர் நின்று போரிடாமல் மறைவாக முதுகில் குத்திய வன்னியனைத்தான் "சப்பாணி, நொண்டி, ஒளித்தவன்" என்று இழிவாக வில்லுப்பாட்டு சொல்லுகிறது. கோழைத்தனத்தைத் திருடுவதைவிடப் பெரிய குற்றமாகப் புலவர் கருதுகிறார். மற்றைப்படி பஞ்சத்தால் அடிபட்டு கொள்ளை அடிக்கத் துணிந்தவர்களைஅவர் குற்றம்சாட்டவில்லை.

கதா பாத்திரங்களை மதிப்பிடுவதில் அவரவர்கள் செய்கையைத்தான் வில்லுப்பாட்டு அடிப்படையாகக் கொண்டுள்ளது. முத்துப்பட்டனது பரந்த உள்ளத்தையும், தியாகத்தையும், வீரத்தையும், குடி ஓம்பலையும், வில்லுப் பாட்டு போற்றிப் பாடுகிறது. தாழ்ந்த சாதி சக்கிலியப்பெண்களின் அழகையும், இசையினிமையையும், கற்பையும், உறுதியையும் புகழ்ந்து பாடுகிறது. வாலப்பகடையின் மான உணர்ச்சியையும் முன்யோசனையையும் அறிவுத்திறனையும், பரந்த மனப்பான்மையையும், பெருமையாக வருணிக்கிறது. சாதிப்பெருமை பேராசை, குறுகிய மனப்பான்மை ஆகிய தன்மைகள் கொண்ட முத்துப் பட்டனின் தமையன்மாரை வில்லுப் பாட்டு கேலி செய்கிறது, பஞ்சத்தில் அடிபட்ட வன்

ளியர் மீது இரக்கம் ஏற்படுகிறது. ஆனல் அவர்களது களவுத் தொழிலும், அவர்களுள் ஒருவனது கோழைத்தனமும் நமக்கு கோபத்தை உண்டாக்குமாறு சித்தரிக்கப்பட்டுள்ளது.

## முடிவுரை

நாட்டுக் கதைக் பாடல்களிலும் கர்ணபரம்பரைக் கதை களிலும் சாதித் தடைகளை மீறி காதல் துளிர்த்து வளர்வது போற்றப்படுகிறது. அக்கதைகளுள் சிலவற்றைப் பற்றியாவது தெரிந்து கொண்டால் தான் முத்துப் பட்டன் கதையின் சிறப்பு இயல்பை நாம் உணர முடியும். ஆகையால் திருநெல்வேலியிலும் நாஞ்சில் நாட்டிலும், வழங்கும் கலப்பு மணம் பற்றிய கதைகள் சிலவற்றை இங்கே குறிப்பிடுவோம்.

மேல் மலையடி வாரத்தில் சிவசைலம் என்ருேர் கிராமம். இக் கிராமத்தில் சேதுராயர் சாதியைச் சேர்ந்த இளைஞன் ஒருவன் இருந்தான். அவன் அடிக்கடி மலைக்கு வேட்டைக்குச் செல்வ துண்டு. அங்கு மலைப்பளிங்கர் சாதியைச் சேர்ந்த பெண்ணைச் சந்தித்தான். அவள் காட்டு சாதியைச் சேர்ந்தவள். முற்றிலும் நாகரிகம் அடையாத இனத்திவள். பளியர்கள் வேட்டையாடியே பெரும்பாலும் தம்வாழ்க்கையைக் கழித்தார்கள். பெண்கள் சிறி தளவு மலை வேளாண்மை செய்வார்கள் கொம்புச் சாமான்கள் செய்வார்கள். வேலை செய்வதனல் அவர்கள் வீட்டில் அடை பட்டுக் கிடக்கமாட்டார்கள். சேதுராய இளைஞனும் வேட்டை யாடச் செல்லும்போது பளிங்க சாதி இளைஞர்களைச் சந்தித்து அளவளாவுவான். அவர்களோடு சேர்ந்து வேட்டையாடுவான். இரவில் ஊருக்கு வெளியே மணமாகாத பளியர் இளைஞர்கள் தங்கும் இளவட்டஞ் சாவடியில் தீக்கணப்பருகே உறங்குவான். அவனும், அவளும் தனிமையில் சந்திக்கும் வாய்ப்புகள் ஏற்பட்டன. அவர்கள் உள்ளங்களில் காதல் அரும்பிற்று. பளியர் சாதியில் விவாக உறவுகள் மிகவும் கண்டிப்பானவை. பெண் வேறு சாதி யானேடு பேசியதைக் கண்டாலே வீட்டில் சிறை வைப்பார்கள். "தவறு நடந்துவிட்டால்" கொன்றே போடுவார்கள். அப்படியிருந் தும் அவள் துணிந்து விட்டாள். உயிரைவிடக் காதலுக்கு மதிப்பு வைத்தாள். அவனுடைய சாதி 'நாகரிகம்' படைத்த சிறுவிவசாயி குடும்பம். ஆடு மாடு நிலபுலன் உள்ள குடும்பம். சாதிக்குள் ளேயே பெரிய குடும்பம் என்று சொல்லலாம். அங்கு எவ்வளவு தடைகள் இவ்வுறவுக்கு ஏற்படும் என்பது இளைஞனுக்குத் தெரி யாது. அவன் ஊர்திரும்பினன். பெற்ருேரிடம் காதல் கொண்ட பெண்ணை மணம் செய்துவைக்கக் கோரினன். அவர்கள் எப்படிக்

காட்டுப் பெண்ணை வீட்டிற்குள் அழைத்துக்கொள்ள முடியும்? அவனை வீட்டிற்குள் அடைத்துப் போட்டார்கள். தாங்கள் சொன்ன பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளாவிட்டால் சொத்துரிமை இல்லை என்றனர். நயத்தாலும், பயத்தாலும் புத்தி சொன்னார்கள். இருமாதங்கள் ஓடின. இவன் வெளிகிளம்ப முடியவில்லை. பளிச்சி இருமாதங்கள் பொறுத்துப் பார்த்தாள். வந்தது வரட்டுமென்று ஒரு உறுதியான முடிவுக்கு வந்தாள். அவளைக் கண்டால் அவன் வந்து விடுவான் என்ற நம்பிக்கையும் அவளுக்கு இருந்தது. அவனது ஊர் நோக்கி வந்தாள். வழியில் கருணையாறு குறுக்கிட்டது. அக்கரையில் காதலனது ஊர். ஆற்றில் வெள்ளம். இக்கரையில் நிலையாக ஒரு பாறைமேல் நின்றாள், அவன் வரக் காணோம். பெற்றோர் அவளை அக்கரையில் கண்டு மகனை இரட்டைத் தாழ்ப்பாள் போட்டுப் பாதுகாத்தனர். அவன் வரவேயில்லை, அவளும் போகவேயில்லை. நின்றாள்; நின்றாள்; நாட்கள், வாரங்கள், மாதங்கள் கழிந்தன. அவள் இளமை மாறிற்று; வனப்பு அழிந்தது; முதுமை தோன்றிற்று. கடைசியில் எலும்புச் கூடு எஞ்சியது.

இவ்வாறு காதலுக்குப் பலியானவளை "பளிச்சியம்மன்" என்று பெயரிட்டு வணங்குகிறார்கள். இவளுக்கு கருணையாற்றங்கரை யருகே சிலையொன்று இருக்கிறது.

இக்கதையில் உள்ளம் ஒன்றுபட வாய்ப்பு இருந்து, காதல் பிணைப்பு ஏற்பட்டாலும், நிலப்பிரபுத்துவ சாதிப்பிரிவு, அப் பிணைப்பை அறுத்தெறிந்து விடுகிறது. இருவரும் காதலித்தார்கள். ஆனால் லைலா, மஜ்னு போன்ற காதலில் தோல்வி கண்டவர்கள் கதையாகவே பளிச்சியம்மன் கதை முடிகிறது. இக்கதை மன மொத்த காதலை வரவேற்ற போதிலும், சாதிப்பிரிவுகளின் சக்தி யையும் காட்டி எச்சரிக்கிறது. ஒருவேளை காதலன் தப்பி வந்து அவளைச் சேர்ந்தாலும், அவர்கள் பளியர்கள் கோபத்துக்கு உள் ளாகிச் சாக நேரிட்டிருக்கும், சாதிப்பிரிவுகளின் கொடூரம் அவ் வளவு இருந்தது. இன்றும் முற்றிலும் மாறிவிட்டதாகச் சொல்ல முடியாது.

## இனி வேறொரு கதை :—

இது சின்ன நாடான் கதையென்று அழைக்கப்படும். சித்தன் விளையில் சின்ன நாடான் என்றொரு கிராமத் தலைவனிருந்தான். அவனுக்கு ஒரே மகன். குமாரசுவாமி என்பது பெயர். குமார சுவாமிக்கு நான்கு சிற்றப்பன்மார். அவர்களுக்குப் பிள்ளை களில்லை. ஆகவே ஐந்து குடும்பங்களுக்கும் அவனே வாரிசு அவர்க

ளுடைய ஒரே சகோதரியின் மகளை அவனுக்குப் பதினெட்டு வய தாகும்போது மணம் செய்து வைத்தார்கள். பணம் பணத் தோடே சேர வேண்டாமா? உள்ளத்தைப்பற்றி அவர்களுக்கு என்ன கவலை. வாலிபன் ஐந்து ஊர்களுக்கும் தலைவனானான். குழந் தையான மனைவி, பூவணைஞ்சு, பெற்றோர் வீட்டில் இருந்தாள். குமாரசுவாமி நாவித மங்கையொருத்தியைக் காதலித்தான். அவளும் காதலித்தாள். இருவரும் ஆடம்பரமின்றி கூடி வாழ்ந் தனர். இதைப் பற்றி அவனுடைய தந்தையும், சிறிய தந்தை யரும் கவலைப்படவில்லை.

"நிலப்பிரபுத்துவ முறையில் பெற்றோர் திருமணம் நிச்சயிக்கத் தொடங்கிய காலத்திலிருந்து திருமண வரைவுக்குட்படாத காத லும் (Illicit Love) தொடங்கி விட்டது" என்று எங்கல்ஸ் கூறுகிறார். அந்த உண்மையை அவனது பெற்றோர்களும் அறிந்திருந்தார்கள். ஆனால் மனைவி சமைந்து வீட்டுக்கு வந்ததும் "ஒழுங்காயிருப்பான்", என்று அவர்கள் நினைத்தார்கள். பூவணைஞ்சு பருவ மெய்தினாள். குமாரசுவாமியை அவளோடு வாழ அழைத்தார்கள். அவன் மறுத்தான். இப்பொழுது போராட்டம் தொடங்கிற்று. ஐந்து பேரும் நேரில் சொல்லியும் பயமுறுத்தியும் பார்த்தார்கள். ஐயம் குட்டி என்ற நாவிதப் பெண்ணுக்குப் பணம் கொடுத்து விரட்டப் பார்த்தார்கள். அவள் மறுக்கவே பயமுறுத்தி விரட்டப் பார்த்தார் கள். குமாரசுவாமி உள்ளத்துணிவோடு அவர்கள் சூழ்ச்சிகளனைத் தையும் எதிர்த்தான். ஐவரும் தங்களுக்கு மேலான நட்டாத்தி ஜமீன்தாரிடம் மனுச்செய்து கொண்டார்கள். அவர் குமாரசுவா மிக்கு, மனைவியைச் சேர்த்துக் கொள்ளும்படி ஓலையனுப்பினார்.

குமார சுவாமி "என் சொந்த வாழ்க்கையில் தலையிட யாருக் கும் உரிமையில்லை." என்று ஓலையை தூதுவன் முன்னிலையிலேயே கிழித்தெறிந்தான். ஜமீன்தார் கோபப்பட்டு, தகப்பனை அழைத்து "உங்களிஷ்டம் போல் செய்து கொள்ளுங்கள்" என்றார்.

அவர்கள் அவனிருப்பிடம் சென்றார்கள். எத்தனை பேர் சென் றாலும் எதிர்த்துக் கொல்லக் கூடிய வாள் வீரன் அவன். ஆகவே தந்திரத்தால் கொல்ல எண்ணினார்கள். ஒருவனைப் பெண் வேட மணிவித்து வீட்டிற்கருகே அனுப்பினார்கள். ஐயம் குட்டி ஆள் அரவம் கேட்டு வெளியே வந்தாள். வாள் வேலோடு ஆட்கள் ஒளிந்திருப்பதைக் கண்டாள். அவர்களிடம் சென்று போய் விடும் படி வேண்டிக் கொண்டாள். அவளோடு யாரோ வாதாடிக் கொண்டிருக்கிறார்கள் என்றெண்ணி குமார சுவாமி வீட்டு வாச லுக்கு வந்தான். கையில் ஆயுதம் எதுவும் இல்லை. பெண் வேடம் பூண்டவன் வீட்டினுள் சென்று அவனைத் திடீரென்று வெளியே

தள்ளினாள். குமாரசாமி கீழே விழுந்தான் தகப்பனும் சிற்றப்பன் மாரும் அவனை இரக்கமின்றிக் கொன்றுவிட்டார்கள். அவனது தலையை அறுத்துக் கொண்டு போய் நட்டாத்தி ஜமீன்தாரிடம் காட்டினார்கள். அவர் தன் பொறுப்பைக் கை கழுவி விட்டார். "கோபத்தில் சொன்ன வார்த்தையை தந்தை இப்படியா நிறை வேற்றுவது?'' என்று அவர் கேட்டார்.

இச் செய்தி கேட்டு சின்ன நாடானின் மனைவி தற்கொலை செய்து கொண்டாள். அவனது காதலியும் உயிரைப் போக்கிக் கொண்டாள்.

இது போலவே தடி வீரையன் கதை, சிவனணைஞ்சு கதை, என்ற பல கதைகள் இதே போன்ற கதைப் பொருள் கொண்டவைகளாகக் காணப்படுகின்றன. தங்கை வேற்றுச் சாதியானைக் காதலிப்பதை அறிந்து தமையன்மார் காதலனைக் கொன்று விடுவதும், காதலி உயிர் நீப்பதுமே இக்கதைகளின் பொருளாகும்.

இக்கதைகளில் பல உண்மை நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டன,

இக்கதைகளின் தலைவர்கள் யாவரினும் முத்துப்பட்டன் பெருஞ் சிறப்புடையவன். அவன் குலச்சிறப்புடையவன்; கல்வி நல முடையவன். ஆளும் அரசனிடம் செல்வாக்குப் பெற்றவன். ஆனால் மேல் தட்டு வாழ்க்கையில் அவன் உள்ளம் நிறைவு பெறவில்லை. தாழ்வான குலத்தில் பிறந்து, உழைத்துப் பிழைக்கும் இள நங்கை யரிடம் அவன் அழகையும், இனிமையையும், மானிடப் பண்பை யும் கண்டான். அவற்றையே போற்றினான். அவர்களோடு மண உறவு கொள்ள, வாலப் பகடையின் நிபந்தனைகள் அனைத்தையும் மனப்பூர்வமாக ஒப்புக்கொண்டான். அதன் மூலம் சாதிப் பெரு மைக்கும், கல்விச் செறுக்குக்கும் சமாதி கட்டினான். மானிடப் பண்பின் சிகரமாக வளர்ச்சிபெற்றான்.

இது மட்டுமா? தனது மனைவியரது உறவினரை தனது உற வினராக்கிக் கொண்டான். அவர்களது துன்பங்களைத் தனது துன்ப மாக கருதினான். அவர்களுடைய வாழ்க்கைக்கு வரும் இடையூறு களைப் போக்கப் போராடினான். இப்போராட்டத்தில் உயிர் நீத் தான்.

தனது குலத்திற்காக மட்டும் அவன் போராடவில்லை. மேல் மலை அடிவாரத்திலுள்ள ஜமீன்தார்களது தூண்டுதலால் வன்னி யர்கள், மலைப்பாதைகள் வழியாக பொதி மாட்டுச் சுமை கொண்டு போகும் வியாபாரிகளைக் கொள்ளை யடித்தார்கள். இவர்

களுடைய கொள்ளையில் ஜமீன்தார்களுக்கும் பங்கு உண்டு. மறை முகமாகக் கொள்ளையடித்தது போதாதென்று, வெளிப்படை யாகக் கொள்ளையடிக்கத் தூண்டிய ஜமீன்தார்களது முயற்சிக்கு முத்துப்பட்டன் தடையாக நின்றான். சக்கிலியர்களைத் திரட்டி கொள்ளைக்காரர்களை விரட்டியடித்தான். பொதிமாட்டுக் காரர்கள் தங்கள் வியாபாரப் பொருள்களை பத்திரமாகக் கொண்டு செல்லப் பாதுகாப்பு அளித்தான். இவனது காவலில், கொள்ளைக் காரர்கள் காட்டினுள்ளும், பாதைகளிலும் வியாபாரிகளைக் கொள்ளையடிக்க முடியவில்லை.

## இக்கதைப் பாடல் :

இதன் ஓலைச்சுவடிகள் இரண்டு குமரி மாவட்டம் தாமர குளத்திலிருந்து எனது நண்பர் வேலாயுதத்தின் உதவியால் கிடைத் தன, அவற்றை இரு அச்சுப்பிரதிகளோடு ஒப்பிட்டு, பெரும்பாலும் ஓலைச்சுவடியைப் பின்பற்றி இக்கதைப்பாடல் பிரதி செய்யப் பட்டது, ஒத்துப்பார்க்கவும், பிரதி செய்யவும் உதவிய புலவர் ஆ. சிவசுப்ரமணியனுக்கு எனது நன்றி.

இக்கதையையும் ஆய்வு முன்னுரையையும் சேர்த்து வெளியிட மதுரைப் பல்கலைக் கழகம் வாய்ப்பளித்துள்ளது. நாட்டுப் பாடல் வெளியீட்டிலும், ஆராய்ச்சியிலும் பேரார்வம் கொண்ட மதுரைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்களுக்கு நான் மிகுதியும் கடமைப் பட்டுள்ளேன். தமிழகம் இவ் வெளியீடுகளைக் கொணர காரணமாயிருந்த தெ. பொ. மீ. அவர்களுக்கும், மதுரைப் பல்கலைக் கழகத்திற்கும் தமிழக நாட்டுப்பாடல்களில் ஆர்வமுள்ளவர்களும், ஆய்வாளர்களும் தமிழக மக்களும் கடமைப்பட்டுள்ளார்கள்.

பாளையங்கோட்டை — நா. வானமாமலை

21-9-70 — பதிப்பாசிரியர்

# முத்துப்பட்டன் வில்லுப்பாட்டு

## காப்பு

அட்டதிக் குலகோர்க் கெல்லாம் அதிபதி யான தீரன்
சட்டமாய் பொதிகை வாழுஞ் சங்கர னளித்த மைந்தன்
துட்டரை யடக்கு கின்ற சொரிமுத்து அய்யன் வாசல்
பட்டன்மேல் வரவு பாட பால முக் கணன்காப் பாமே

### நாட்டுவளம்

நாடுநல்லோ நல்லநாடு நாவலர்கள் புகழும் நாடு
கோடைமழை பொழியும்நாடு குளிர்ந்ததென்றல் வீசும்நாடு
இஞ்சிபிஞ்சி பூக்கும்நாடு இருவாச்சி மலரும்நாடு
வருக்கைப் பிலாமரமும் வளர்ந்தோங்கி செழிக்கும்நாடு
அத்திமுகன்[1] குடியிருக்கும் ஆரிய நாடதிலே[2]

### முத்துப்பட்டனின் கல்வி அறிவு

ஆரிய நாடதிலே அழகுடைய பட்டன்மார்கள்
அண்ணன்பட்டன் தம்பிபட்டன் அப்பாபட்டன் குப்பாபட்டன்
சங்குபட்டன் சரவணபட்டன் தக்கசோம லிங்கப்பட்டன்[3]
எல்லாத்துக்கும் இளையவனும் ஏத்தன்[4] ஆரிய முத்துப்பட்டன்
அஞ்சுநல்ல வயதுதன்னில் அசலாத்து குழந்தையுடன்
பள்ளிக்குத் தானிருந்து பலகணக்கும் தான்படித்து
ஆனையேற்றம் குதிரையேற்றம் அளவிறந்த தொழில் படித்தான்
மல்லடவு[5] சிலம்புத்தொழில் நோக்குவித்தை குறளிவித்தை
வித்தையெல்லாம் தான்படித்து வேதாந்திபோ லிருக்கையிலே

### தமையன்களுடன் சண்டையிட்டு கொட்டாரக்கரை செல்லுதல்

சத்தியவான் முத்துப்பட்டன் தமயன்மாரோடே சண்டை செய்து
மாதாபிதா வெறுத்து வஸ்துவகை[6] தானிழந்து
பிறந்த ஊர் தனைக்கடந்து பிறவூரில் போய்ச்சேர்ந்தான்
இருந்து நினைத்தானே எண்ணமிட்டான் கோடிபுத்தி
படித்ததொழில் செய்யவென்றால் பார்ப்பதற் கொருவரில்லை
அடுத்தவூரு ஆனதிலே அமர்ந்தாலும் சிறப்புமில்லை

சேரனிடம் போனேமானல் சேவிக்கலாம் மிச்சமில்லே
சோழனிடம் போனேமானல் சோறுண்டு சுனேயுமில்லே[7]
பாண்டியனிடம் போனேமானல் பழுதுவரு மென்றுசொல்லி
கொட்டாரக் கரைதனிலே ராமராஜ னரண்மனேயில்
போகவேணு மென்றுசொல்லி புகழுடைய முத்துப்பட்டன்
கொட்டாரக் கரையதிலே ராமராஜன் ஊரதிலே
சட்டனவே தானடந்து சஞ்சலமாய் வீற்றிருந்தான்

முத்துப்பட்டனின் ஆற்றலேக் கொட்டாரக்கரை மன்னன் காணல்

ராஜனுமே வீற்றிருக்க நாட்டியங்கள் ஆடிவர
அப்போது முத்துப்பட்டன் அவனுடைய தொழில்காண
சமுத்திரத்தில் வாள்நிறுத்தி சக்கரம்போல் சுழன்றுவந்தான்
கண்டானே அரசமன்னன் கட்டழகன் பட்டனேத்தான்
ராஜாவோ மந்திரியோ நமக்குஇவன் மாற்முனே
வாடாநீ அறிக்கைக்காரா வார்த்தையொன்று சொல்லக்கேளாய்
அக்ஷணமே அறிக்கைகாரா அவனேயிங்கே அழைத்துவாடா

மன்னன் முன் முத்துப்பட்டன்

அப்போ தறியக்காரன் அவனேயங்கே யழைத்துவந்தான்
வந்தவுடன் ராஜமன்னன் வாய்திறந்தேது சொல்வான்
எந்தவூர் எந்ததேசம் எங்கிருந்து வந்தபிள்ளே
என்று சொன்ன வேளேயிலே ஏத்தரிய[8] முத்துப்பட்டன்
சொல்லுவானு மரசனிடஞ் சோதிமுத்து வாய்திறந்து
ஆரிய நாடதிலே ஆறண்ணன் மாரோடோ
சண்டையிட்டு யான்பாவி தனிவழியே வந்துவிட்டேன்
என்னேயொரு சேவகமா யிருத்திக்கொள்ள வேணுமையா

மன்னனிடம் வேலேக்கு அமர்தல்

என்றுசொன்ன வேளேயிலே ஏற்றதொரு அரசமன்னன்
பதினறு வயதுப்பிள்ளே பல கணக்குப் படித்தாரென்று
கைக்காயிரம் மெய்க்காயிரம் கால்க்காயிரம் வாள்க்காயிரம்
நன்முக சேவகன்தான் நமக்குஇவன் கிடைத்தானென்று
நாலாயிரம் பொன்சம்பளம் நலமாகத் திட்டம்செய்து
சேவகற்கு மனுவெழுதி[9] திறமையுட னிருக்கையிலே

முத்துப்பட்டனேத் தேடி தமையன்மார் வரல்

ஆரிய நாடதிலே ஆறண்ணன் மார்கூடி
சண்டையிட்டுப் போனதென்று தம்பியைத்தான் தேடியல்லோ
வாராரே ஊர்க்கொருவர் வழிமேலே தேடிக்கொண்டு
அம்பலப் புழைதனிலே மகாதேவருட கோவிலிலே

அத்தாள மவதரித்து அடுத்தநாள் தேடிவாரார்
கொட்டாரக் கரைதனிலே ராமராஜா ஊரதிலே
ஊரெல்லாம் தேடியவர் ஒய்ந்திருக்கும் வேளையிலே
வைதீகனொரு பார்ப்பான் வந்தவர்க ளண்டையிலே
"வாருங்கோ பட்டன்மாரே வாடியிருப்பானேன்"
"அய்யாவே பெரியவரே ஆசீர்வாதஞ் சொல்லக்கேளு
எங்களுக் கிளையதம்பி ஏற்றஆரிய முத்துப்பட்டன்
பட்டுநல்ல குடைபிடித்து பாப்பாசி காலில்மாட்டி"
உத்தரியந் தோளில்மாட்டி உல்லாசமாக வாரான்,
அரண்மனைக்குப் போவதற்கு ஆணழகன் வாரபோது
கண்டாரே யண்ணன்மார்கள் கட்டழகன் பட்டனைத்தான்.
"என்பிறவி என்பிறவி உன்னைக்கண்டெத்தனை நாளாச்சுதடா
தாயுந் தகப்பனும் தவித்தல்லோ தேடுகிறார்
சேஷய்யர் பெண்ணையல்லோ சிறப்பூட்டக் கேட்டிருக்கு
திரவியங்க ளுண்டுமானால் சீமைக்குப் போய்விடலாம்"
என்றுசொல்லி பட்டனவன் ஏற்றமனைதனிலே

மன்னனிடம் முத்துப்பட்டன் விடைபெற்று பரிசுகள் பெறுதல்

சொல்லுவான் ராஜனிடம் சோதிமுத்து[10] வாய் திறந்து
அண்ணன்மார் வந்ததும் அவர்கள் சொன்ன சங்கதியும்
அப்போது அரசமன்னன் அவனுடைய சம்பளத்தை
சாளியல் சாளியலாய்[11] "சம்பளமுந் தான்கொடுத்து
காதுக்கு முத்துக்கடுக்கனும் கண்டசரமாலையுங் கொடுத்தான்
கைவிரல்பத்துக்கும் கல்வைத்தமோதிரம் கஞ்சப்பூபஞ்சரத்னம்
யாளிமு டுகுட னேவீரச சங்கிலி நல்முத்துப் பாசியீந்து
ராசிமா லைதங்கக் காசிமா லையுடன் நல்லசுட்டிப்பதக்கம்
வீராவா ளிப்பட்டு தங்கச்சரப்பளி மேலுக்கு உத்தரியம்
மெய்ப்புடன் காலுக்கு தங்கக் கொலுசதும் முத்துக்குடை
கொடுத்தார்
குடையும் விடைகொடுத்து கொட்டாரம் விட்டிறங்கி
அண்ணன்மார் வந்திருக்கும் அந்தவிடம் வந்துசேர்ந்தான்

காட்டு வழியில் உள்ள பயம்

தம்பியே முத்துப்பட்டா சரியல்ல காட்டுப்பாதை
வம்பதாய் கள்ளர்வந்து வதைத்துமே விடுவார்நம்மை
செம்படை மிருகந்தன்னை சேரவே ஒன்றாய்க்கூடி
கம்ப ம்போ லொன்றுசேர்ந்து கனமூட்டைப் போமென்றார்
என்றவர் சொல்லக்கேட்டு ஏற்றதோர் இளையபட்டன்
செங்கதி ரோனுக்கேற்ற சிவந்திநூல் பட்டுவாங்கி

அங்கவர் சுமையுங்கட்டி "ஆரியங்காவுப் பாதை"
மங்கள மாகவிந்த வடமலைப்பாதை போவோம்

காட்டு வழியே செல்லுதல்

வானரஞ்சூழ்ந்த மலையதுதனிலே வாராரே பட்டன்மார்கள்
மந்திகள் கொம்பில் மறைந்துவிழுகிற மாமரச்சோலை விட்டார்
தேக்குடனீட்டியும் வேங்கையும் பாலை சிவந்தகுளுமுடனே
சிங்காரமாக மலையுங்கடந்து திருவாரியன்[12] கோவில் வந்தார்.
வந்தந்த நாதனைக்கண்டு தொழுது மறுநாள் எழுந்திருந்து
வாய்த்த குளத்துப்புளியுஞ் சவரிமலையுங் கடந்தார்கள்.
நடந்து பொதிகைமலை வழியேவர சண்ணுமாமுட்டில் வந்து
காக்கவேணும் பொதிகாசலமென்று கட்டுடனே வாரார்
வந்ததிரு நீலகண்டனைக்கண்டு[13] கடவிளைதானும் விட்டு
வரிசையாய் மேல்சொரிமுத்து பாதையும் வழிமேலே வந்து
சேர்ந்தா
தளவாயுட கொட்டகையிலே சுமைதானு மிறக்கிவைத்து
சந்தியாவந்தனம்பண்ணி சாயரட்சை சாத்தாவைத்தான்
தொழுதா

சொரிமுத்தையரை வணங்கி வழி நடத்தல்

அய்யா சொரிமுத்தய்யரைத் தொழுதழகு பட்டனைக் கண்டு
மகிழ்
மெய்யன் முத்துபட்டனைத்தான் தமக்காகவேணு மென்று
விருப்பம
செய்கடனே முடித்தவர்கள் சமையல்செய்து சிவபூஜை
கழித்தன்று தாமதி
வெய்யோன் வந்துதிக்குமுன்னே வீதிவழிநடந்து கள்ள ரோ
விட்ட

சந்தியாவந்தனம் செய்ய முத்துப்பட்டன் தமையன்மாரைப் பி

கள்ளரோடை கடந்து பள்ளவிளையும் விட்டு
காட்டுப்பொத்தை கூடியோர்டி கஷ்டத்துடனே நடந்தார்
நடந்து முறிஞ்சாமபுல்லு தட்டு[14] விளையும் கடந்து
நல்லசுக்கு நாறிபொத்தை[15] மூக்குநாறி விளை[16] கடந்து
வில்லுவழி[17]யுங் கடந்து பெருச்சாளிப் பொத்தைவிட்டு
பேரழகன் முத்துப்பட்டன் அரசடித் துறையில் வர
அரசடித் துறையில்வர அழகுமுத்து பட்டனவன்
அண்ணன்மாரே தாகவிடை தீர்த்துவாரேன் நீங்கள் போங்கோ
போங்களென்று சொன்னவுடன் பொருளாசைகொண்ட பட்டர்

பொட்டெனவே ஓடிவாடா விக்கிரமசிங்கந் தன்னிலே
என்றுசொல்லி அண்ணன்போக ஆரியமுத்துப் பட்டன்
இறங்கி படித்துறையில் சந்தியாவந்தனம் பண்ணி
நன்ருக சிவலிங்கமும் நாராயணன் புஸ்தகமும்
நாலுவேத முறைப்படி பூசைபண்ணும் வேளையிலே
பூசைபண்ணும் வேளையிலே முத்தையன் மனப்படியே
பின்னாலே கானந்தான் தன்னாலே வந்திடுமாம்

**வாலப்பகடை என்னும் சக்கிலியனின் இரு பெண்களை முத்துப்பட்டன் காணல்**

பட்டனும் பூசைசெய்ய பாவையர் ரெண்டு பெண்கள்
பெட்டியிலே சோறுங்கொண்டு பூச்சிநாய்தனைப் பிடித்து
பட்டணந் தன்னைவிட்டு பசுக்கிடைக்கேகும் நேரம்
மட்டில்லா தாகமுண்டாய் வந்தனர் தண்ணீர்தனில்
குனிந்தவர் தண்ணீர்கோரி குடித்ததுமே தாகம்ர்தீத்து
பணிந்துமே கிடைக்குப்போக[18] பாவையர் பாடுமோசை
இனந்தெரியாமல் கேட்டு யேங்கியே முத்துப்பட்டன்
வனந்தனில் சுத்திஓடி மறித்திட்டான் பெண்கள்தன்னை

முத்துப்பட்டனுக்கும் பெண்களுக்குமிடையே
நடைபெறும் உரையாதுல்

பட்டன் :

வனத்தில் போறபெண்ணே, எனக்கியைந்த தோர்கண்ணே
வரிசை மச்சினியே இலங்கிய மதுரசக் கனியே
கன்னல் வில்மானே மருவும் கட்டி யந்தானே
கண்கொண் டுபாராய் என்னுட காத லைத்தீராய்
பங்க யத்தேனே மன்மதன் பகழி யைத்தானே
பாசங் கொண்டேனே உன்மேல் நேசங் கொண்டேனே
சங்கீ தக்குயிலே வரும் தனிஇன்ப மயிலே
தாகங் கொண்டேனே உன்மேல் மோகங் கொண்டேனே
பங்கயக் குறிப்போ உன்மனம் பாறையி னிருப்போ
பச்சைக் கல்நிறத்தாய் தனத்தையும் கச்சினில்மறைத்தாய்
பெண்ணே உனைப்பெற்ற தாய்தகப்பனூரு சொல்லு
பேதமை கொள்ளாது சற்றே என்முன்னாக நில்லு.

பெண்கள்:

பின்னே வழிவிட்டு ஓடணுமானாலுங் கல்லு
வேறே பரியாசஞ்[19] சொன்னால் பறிப்போமே பல்லு

பட்டன்:

இந்தஉறுதியுஞ் சந்தோஷஞ் சொன்னலுங் கேளேன்
இஷ்டமாக கூடுடுயிருக்க இது நல்லநாளே

பெண்கள்:

வந்தசகுனமோ அக்காள்இ வனு ருகேளு
மடியைப்பிடிக்க வருகிருன் பாவி சண்டாளன்,
சாம்ப சிவநாதர் போலிருக்கிறீர் சுவாமி
சக்கிலிச்சி நாங்கள் தீண்டப்பொறுக்குமோ—பூமி

பட்டன் :

ஆண்டவன் செயலினலுந்தனே பெற்ருளே—மாமி
அல்லாமல் வேறில்லே தாகந்தணிந்திட—நேமி
சொந்தமாகவே வந்தேன் மையியலேத்திரு.

பெண்கள்:

சுவாமி பொதிகாசல முண்டு கார்ப்பார்
விந்தையாய் பேசுருனே எங்களேக் காரு
வெட்டிடு வானெனன்தகப்பன் இதோ உன்னேபாரு.

பட்டன் :

நாக்கை சுயழற்றுது உள்வாய்யுளறுது பெண்ணே
நன்மையுண்டு கையால் தண்ணீரு தந்திடு கண்ணே.

பெண்கள்:

கன்றுக்கிரங்கும் பசுபோ லலேகிறீர் சுவாமி,
இது காரியமல்ல வந்தவழி போம் சொன்னேன்.
அப்பன் பசியோடடே தேடியிருப்பானே யெங்களே,
அப்புறம் தூரவிலகிடும் போரும் நாங்களே.

பட்டன் :

ஒப்புடன் கூடியிருக்கலாஞ் சக்கிலிப் பெண்களே
ஓடிப்போனு லெந்தன்தோஷம் விடாதடி உங்களே

பெண்கள்;

பொழுது உயர்ந்து வெகுநேரமாகுது பொம்மக்கா
போகவொட்டாமலே நம்மை மறிக்கிருன் திம்மக்கா
மறித்துமே பெண்களே முந்தியே எட்டிப் பிடிக்கிருன்
மையல் பொறுக்காமல் மன்மதபாணந் துடிக்கிருன்

பெண்களிருவரும் ஓடிப்போதலும் தொடர்ந்து பின் சென்ற பட்டன் கீழே விழுதலும்

இன்றுபிடியென்று[20] அக்காளுந் தங்கையுஞ் சேர்ந்து
இருண்ட செடிக்குள்ளே நுழைந்துமே போகிறுர்கள் ஓடி.
மின்னலைப் போலொத்த பெண்களைக் காணுமல் கூடி
பின்னுலே வருகிறுரே துள்ளிச்சாடி.
பெண்களுக்கு புண்ணியம் உங்கள்கூட நானும் வாரேன்
பேசாம லோடுகிறீர்கள் மறுமொழி கூறேன்.
உள்பதர்த்தங்கொண்டு ஓடுகிறுர் சூறுவளிபோல்
உத்தமனஞ் சாணத்தி யொத்தைவழி[21] யாகத்தானே
ஒட்டமுந் தாகமும் வெயிலும்பொடி சூடுங்கொண்டு
உத்தம முத்துப்பட்டன் கீழ்விழுந்தான் மையல்கொண்டு.

பெண்களிருவரும் தகப்பனிடம் நடந்தவற்றைக் கூறல்

ஓட்டமாய் தகப்பனுடைய கிடையைப்போய்க் கண்டு
வாலப் பகடையுடன் சொல்லுவாள் செய்திவிண்டு

பெண்கள்:

அரசடி துறையிலிருந்து ஒரு பார்ப்பான் வந்து
அக்காளையு மென்னையும் கோரணி[22]செய்தான் துணிந்து
மடமடென்று காட்டுப்பாதையா யோடிவந்து
வந்தோம் இளைத்தோம் மாபாவி உனக்குப் பிறந்து
யார்செய்த நன்மையே நாங்கள்பிழைத் தோடிவந்தோம்.
அய்யா சொரிமுத்தய்யர்க்கு வழிபாடு நேர்ந்தோம்.
தாயாரறிந்தால் உயிர்வைக்க மாட்டாளே அம்மாள்.
சாமர்த்திய மெல்லாமங்கே தூரக்கெட்டி வைப்பாள்

வாலப்பகடை பட்டனைக் காணல்

அந்தமொழி கேட்டவுடன் பகடைதானும்
அஞ்சுமணி வல்லயமும்[23] தடியுங்கொண்டு
வந்தவழிதனைத் தேடி நாய்பிடித்து
மாடறுக்கும் கத்தி கையிலெடுத்துக்கொண்டு
சிந்தை பொறிபோல் கலங்கி செருப்பு மாட்டி
செடியில் நுழைந்து குறுக்குவழி வாரநேரம்[24]
அந்தணன்தான் கிடக்கிறதை பகடைகண்டு
தன்முகத்தி லறைந்தழுது புலம்புவானே

வாலப்பகடையின் புலம்பல்

அய்யய்யோ பாவித்தெய்வமே இந்தநல் லழகுடைய
ஆண்பிள்ளைபோல் கண்டறியே ஞன்

தெய்வலோகந் தன்னையாளும் இந்திரனே தேவனே?
தேவாதி தேவனே அறியேன்.
மன்மதனே மாயனே ஏகச் சக்ராதிபனே?
வையகத்தில் கண்டறியேனுன்.
வையகத்தில் வாழும் அகத்தியனே வானவனே இந்திரனே;
மகாபெரியாரோ அறியேனுன்.
பெற்றெடுத்த மாதாபிதா கண்டாலுயிர் வைப்பாரோ?
பொறாத மலடியுஞ் சகிப்பாளோ?
தந்திர வெயிலிலே நித்திரை போகவும்,
சங்கடமென்ன வந்தது அய்யனே?
ராஜனே தெய்வகுல நாயகனே எழுந்திரியும்,
நாகமரத்தின் நிழலில் போய்ப்படும்.

மயக்கம் தெளிந்தெழுந்த பட்டனிடம் பகடை பேசல்

கையை கொண்டு தட்டிச் சின்னக் கல்லைக்கொண்டெறிந்
தெழுப்ப

கண்விழித்துப் பார்த்தான் முத்துப்பட்டனும்,
விழித்தவுடன் முத்துப்பட்டனும் நீயாரென்று கேட்க
மொழிந்திடுவான் வாலபகடைதான்.
அய்யாவே தம்பிரானே எந்தன் மக்கள் ரெண்டுபேர்கள்
அரசடித் துறையில் வரும் வேளையிலே
மோகித்து ஒருபார்ப்பான் மோசம் செய்ய வந்தானும்
மூர்க்கனை ரெண்டு துண்டாக வெட்டுவேன்
கண்டதுண்டமாய் வெட்டிக் கத்திக்கிரையாய்க் கொடுப்பேன்
காட்டுநரிக் கிரையாக வெட்டுவேன்

பட்டனின் மறுமொழியும் வேண்டுகோளும்

அந்தமொழி சொன்னவுடன் சக்கிலியன் என்றறிந்து
அப்போது முத்துப்பட்டன் முறைசெப்புவான்;
"தாயுடன் கூடப்பிறந்த ஆசையம்மானே!
சமர்த்திகளுக் காசைப்பட்டு ஓடிவந்தேனே.
பூசைவிட்டுப் பொருள்விட்டு என்மனந்தானே
பெண்ணாசைப்பட்ட பாவிநானே
தாய்வெறுத்தேன் தமையனிழந்தேன் உன்மக்களை!
நான் வெறுத்தா லெந்தன் உயிர் மாண்டிருந்தானே.
பேய் பிடித்தானைப் போலாகிவிட்டேன்
தான் பிழையேன், சக்கிலியா உன்மக்களை"
நாலுபேரறிய மாலைசூட்டிவைப்பாய் நாளை,
நாளையென்று உரைத்தவுடன் வாலப்பகடை,

நாவுளறிக் கால்பதறி அவன் ஏதோ சொல்லுவான்.
பாவியைப் பார்த்திந்தமொழி சொல்ல நியாயமோ
பார்த்தபேர்க்கு ஏற்றிடுமோ நேர்த்திதானிது.

**பட்டனின் வேண்டுகோளுக்குப் பகடையின் பதில்**

நாயல்லவோ எங்கள்குலம் ஓ நயினுரே!
நாற்றமுள்ள விடக்[5]கெடுப்போம் ஓ நயினுரே!
செத்த மாடறுக்க வேணும் ஓ நயினுரே!
சேரிக்கெல்லாம் பங்கிடவேணும் ஓ நயினுரே!
ஆட்டுத்தோலும் மாட்டுத்தோலும் அழுகவைப்போமே,
அதையெடுத்து உமக்குநன்ருய் அடியறு[6]ப்போமே,
அடியறுப்போம் சுவடுதைப்போம் வாரறுப்போமே
அதையெடுத்துக் கடைக்குக்கடை கொண்டு விற்போமே,
சாராயம் கள்குடிப்போம் வெறிபிடித்தபேர்
சாதியிலே சக்கிலியன்தான் நயினுரே,

**பட்டனின் மறுமொழி**

கோபம் வேண்டாம் மாமனுரே சொல்லக்கோளும் நீர்
கோடிகோடி தர்மமுண்டு உமது மக்களை
சாதிமுறையாகத் தாலிகெட்டி வைத்தாக்கால்
சகலதொழிலு முங்கள்கூட செய்வேனுன்.
தாய் தகப்பன் நீயல்லவோ யின்றுமுதலுக்கு
சாதிசனம்போல் நின்றுவாரேன் குடிலுக்கு.

**தன்பெண்ணை மணம் செய்துகொடுக்க பகடை விதித்த நிபந்தனைகள்**

வருகிறேன் என்றீர் சுவாமி என்னபிரமை
வருமிடத்தில் சொல்லுவது வகைக்குவருமோ?[27]
அப்படிச் சிவன் கற்பனை[28] உண்டுமாஞல்
நாற்பது நாளைக்குள் முப்புரிநூலும் குடுமியும்
மெய்யுடன் அறுத்தெறிந்து எங்களைப்போல்
ஒப்புடன்நீர் செருப்புக்கட்டி வந்தாக்கால்
எப்படியாகிலும் மக்களைக் கைபிடித்துத் தாரேன்

**இருவரும் பிரிந்து செல்லல்**

தாரேனென்று சொன்னமொழி சத்தியமென்று
சாக்ஷிவை, சூரியன்மேல், சஞ்சலமில்லாமல்
எந்தனை ஊருக்கு தானனுப்பு மாமா
போய்வாரு மூருக்கு பொழுது மடையுமுன்னே
போறேனென்று வாலப்பகடை போய் கிடைசேர்ந்தானே.

**தமையன்மாரை சந்தித்து பட்டன் தன்விருப்பத்தைக் கூறல்**

வேறு

ஆகட்டுமென்று நடந்து விக்ரமசிங்க அக்கிராகரபதில்
அண்ணன்மார்வந்து இறங்கியிருக்கும் அகரத்தை[29] வந்துகண்டார்
கண்டவுடனே "என் அண்ணரே ஊருக்குக் காலமே நீங்கள் போங்கோ
கலியாணம் பண்ணவே போகிறேன் வாலப்பகடையுட மக்களை
சக்கிலியனுடைய சாதியிலே போய்த் தாலிகட்டப் போகிறேன்"
தமயன்மாரே நீங்கள் ஊருக்குபோங்கோ தாமதிக்க வேண்டாம்.

**தமையன்கள் பட்டனைக் கல்லறையில் அடைத்தல்**

அந்தமொழி கேட்க தம்பிக்கு ஞானப்பைத்தியமென்று சொல்லி
அகரத்துக் கல்லறைக்குள்ளே பிடித்து அடைத்தாரே பட்டனைத் தான்.

**பட்டன் தப்பியோடல்**

அடைத்துக்கிடக்க அவதி வந்ததென்று அலறி அபயமிட
அறைக்கதவும் படீரென்று திறக்க வெளியில் வந்துவிட்டான்.

**பகடையின் நிபந்தனைகளை பட்டன் நிறைவேற்றல்**

விக்கிரமசிங்கபுரத்து சந்தையில் தோல் வேண்டியபடியறுத்து
விநோதமாகச் செருப்பு கட்டிக்சொண்டு வீதி வழிநடந்தான்.
நடுவழியில் பின் குடும்பியும்[30] பூனூலும் நன்ருகிவேயறுத்து
நாலு திசைக்கு மெறிந்து விட்டு பட்டன் நடந்தான் பசுக் கிடைக்கு
ஆலம்பட்டி கிடைதனிலே வாலப்பகடையுட குடிசையிலே
அழகு செருப்பை நடையிலே தூக்கி விட்டப்புறம் போயிருந்தான்.

**பட்டனைப் பகடை காணல்**

பொழுது பறைந்தபின் கிடைகளைவிட்டு புகுந்தான் குடிலுக் குள்ளே
பொடுக்கென்று நெற்றியிலே செருப்புப்புட்டி அத்து[31] விழுந்திடு மாம்
விழுந்த செருப்பையெடுத்து குடிசை வெளிச்சத்திம் கொண்டு போய்
மேலும் கீழும் பார்த்து தலையிலடித்து விதிவசமென்று சொன்னுன்.
வாருங் குடிசைக்குள் மருமகனே, என்ருன்! வத்து புகுந்திருந்தான்
வரிசையுடனே மருமகனுக்கு வட்டப் பலகை யிட்டான்

**பகடையின் பெண்களுக்கும் பட்டனுக்கும் திருமணம் நடைபெறுதல்**

இருந்தவுடனே அழகனைக்கண்டு இருதோளும் பூரித்து
என்மகளுக்கு கலியாணமென்று ஊர்முறைக்காளனுப்பி

இன பாதிக்காரர் வள்ளுவனும் வந்து ஏத்த 32 முகூர்த்தமிட்டு
இட்டாரே அத்திமரம் நாட்டி ஆவரம்பூக்கொண்டு பந்தலிட்டு
மணவரையிட்டு பகடைகள்கூடி வாய்த்த நல்ல பெண்களுக்கு
வளையுடன் பாசியும் காதில் பொன்னோலையும் மஞ்சள் பருக்கைபூசி
நெற்றியில் பொட்டு மையிட்டு மூக்குத்திநத்தும் பொருந்தவிட்டு
வேடிக்கையாக இரு பெண்கள் தன்னையும் நேசமாய்க் கூட்டி வந்து
வந்தபட்டனும் பெண்களையும் அந்த மணவறை தன்னில் வைத்து
மங்கிலியம் நிறைநாழியும் வைத்துக் கணபதி கொண்டுவைத்து
சந்திரன் சூரியன் தேவர்கள் மூவர்கள் சாட்சியாக முத்துப்பட்டன்
தாலியைப் பூட்டினான் பொம்மக்கா திம்மக்கா தன்னுடைய
கழுத்தில்.

கழுத்தில் மாலையிட பகடைகள்கூட கலந்து குலவையிட
காப்புக்கையோடந்த மாப்பிள்ளைக்கு பெண் சாப்பாடு கொண்டு
வைக்க

உறவு முறையாகும் சடங்கு கழித்தவுடனே விருந்தளிக்க
உற்றநல்ல பகடையெல்லாம் மொத்தமாய்த் தாரை வார்த்தார்
தாரை வார்த்தவுடன் சக்கிலியப்பெண்கள் சகலபேரும் கூடி
சாதி முறைப்படி கும்மியடிக்கிற சத்தத்தைக் கேளுங்கள்.

திருமணத்தில் கும்மி அடித்தல்

ஆரிய நாட்டு பிராமணனும் அவர் ஆறண்ணமார்க்கு இளையதம்பி,
காரணவான் முத்துப்பட்டனுக்கு கலியாணகும்மி யடிப்போமடி.
இந்திரன் போல் முகத்தழகும் சூரியன் போல் முகத்தழகும்
சந்திரன் போல் முத்துப்பட்டனுக்கு இசையகும்மி யடிப்போமடி,
தெய்வகுலத்துப் பிறந்தவனே. தெக்ஷிண தேசத்து மந்திரியோ
அன்னமே இவர்க்கும் பெண்களுக்குமாக ஆனந்தக்கும்மி யடிப்
போமடி.
மோகனரம்பையோ மேனகையோ பெண்கள் பார்வையின் கொண்
டையில் சாயலைப்போல்
வகுப்பு கொண்டையும் காதிலேயோலையும் வர்ணித்துக் கும்மி
யடிப்போமடி.
முறுக்குமீசையும் பொட்டழகும் முத்துக் கோர்த்தாப் போற்
பல்லழகும்
அரக்குருமாலும் பட்டனைவர்ணித்து ஆனந்தக்கும்பி யடிப்போமடி.
மன்மதனும் ரதி தன்மையும் போலவே வகுத்தானே பாவி
பிரமனுந்தான்.
கண்ணுக் கேற்றவர் பட்டனேயல்லாது காண்கிலோம் பூமிதனி
லொருவர்
வெற்றிலை பாக்கு பழம் தேங்காய் நமக்கெத்தனை கேட்டாலும்
தான் கொடுப்பார்.

அத்தனருள் பெற்று நித்தியம் வாழ்வாரென்று ஆனந்தக் கும்மி
யடிப்போமடி

திருமணச் சடங்குகள் முடிந்து பட்டன் ஓய்வு கொள்ளல்

வஞ்சிப்பகடை[34] கெஞ்சிக்கும்மியடித்து வட்டமணவறைகிட்ட
வந்து வாலப் பகடையும் சேருப்பகடையும் வள்ளிப் பகடையும்
ஊமச்சியும்

கோவில் பகடையும் சிவனிப்பகடையும் பொம்மி பகடையும்
சோனியரும்

ராச்சி பகடையும் சின்ன பகடையும் நாச்சிபகடையும் பாபாக்களும்
நாலைந்து பகடையும் ஒன்ருகக்கூடி நத்தையும் சட்டியிலே சோறு
வைத்து

நல்விருந்து களித்துச் சாராயம் கள்ளுக்குடித்த வெறியுடனே
கள்ளும் சாராயமும் இறைச்சியும் எச்சியும் கொள்ளாமலே முத்துப்
பட்டனுக்கு
கண்ணிலே காயநீர் வந்திறங்கியே கஷ்டப்படுகிற வேளையிலே,
கலியாணச் சடங்கு முடியுமுன்னே யிந்தகாலப் பிழைவந்தது
பட்டனுக்கு
பொம்மக்கா மடியில் காலைவைத்தான் திம்மக்கா மடியில் தலையை
வைத்தான்,
பெண்களிடந்தன்னில் நித்திரை போகவே அங்கொரு சொர்ப்பனம்
கண்பானும்,

பட்டன் கண்ட கனவு

நித்திரை தனிலே பொல்லாத சொர்ப்பனம் துர்க்குறியாகவே
கண்டானும்
கருமயிலைகாளை கிடைவிட்டோடி கசத்தில் விழுந்திறக்கக்
கண்டானும்.
நேரிட்டுவந்து ஒருகடுவாயது[35] கூறிட்டுக்கீறவும் கண்டானும்
கையிலே கட்டிய காப்ப நூல்தன்னை கறையானரித்திடக்
கண்டானும்
கோழிக் கூட்டுக்குள் விருகுவந்து[36] நல்லகுஞ்சு பெட்டையும்
கொள்ளக் கண்டான்.
கொண்டையறுத்து மலையிலே தூக்கிக் கிடக்கக்கண்டான் பட்டன்
கனவு தன்னை

பட்டனின் மாடுகள் களவு போனதாக செய்தி வருதல்

பதறி முழித்து பலதிக்கும் பார்த்து பரிதாபங் கொண்டங் கிருக்கை
யிலே
பட்டனுடைய பசுக்கிடையை கள்ளர் பத்திக்கொண்டுபோனுர்
என்றுசொல்லி வன்னியர்
"அண்ணே முத்துப்பட்டா உனக்கிடைமாட்டைஅடித்துக் கொண்டு
போருர்"

ஆரென்று கேட்டேன் அடிக்கவந்தான் நானுங்கூட மாறியடித்
தோடி வந்தேன்
ஊத்துமலையில் வன்னியரும் உப்பரங்கோட்டை[37] யானுங்கூடி
உன்கிடை மாட்டை திசை சாய்த்துப் போகிறார் ஓடிப்போ
முத்துப்பட்டா"

களவுபோன மாடுகளை மீட்க பட்டன் புறப்படுதல்

தரு

"சட்டெனவே எழுந்தவன் வல்லய மெங்கே தடிகையிலே" யென்றான்
சந்திரகாவி உருமால் தலையிலே சுங்கல் வைத்துக்கட்டி
சல்லடம் கட்டி கச்சையிறுக்கி சமுதாடு தான் சொருகி
தட்டியவன் காடுதாங்கி செருப்பதை மாட்டினான் காலதிலே
பூச்சிநாய் தன்னையும் பாகத்தில் சேர்த்து புறப்படும் வேளையிலே

பட்டன் மனைவியர் தடுத்தல்

"பெண்களே நீங்கள் இருங்கோ நானும்போய்வாரேன்" கள்ளர்கள்
"போனாலும் போகட்டும் என்னப்பனிடம் சொல்லி பொழுது
விடிந்தவுடன்
போயந்தக் கள்ளரை வெட்டி யதுக்கிப்போன பசுக்களை
நாளையுதயத்தில் கொண்டுவரச் சொல்வோம் நாயகரே போக
வேண்டாம்
நலமாய் கணவரே கோபமில்லாமலே நன்றாய் படுத்துறங்கும்
மாலை மணத்தோடே யிந்த ராத்திரியில் மாற்றான்மேல் சண்டை
செய்ய
வகையுடன் போவார் ஒருவரை காணிலோம் வையகம் தன்னிலே"
தான்.
என்று இருபெண்கள் கணவன் யிடுப்பை எட்டிப் பிடித்துக்
கொண்டு
"என்னாணை உன்னாணை கண்ணாணை ஈஸ்வரன் தன்னாணை போக
வேண்டாம்
கணவர் நீர் போனக்கால் உம்முடனே கன்னியரும் வாரோம்"

பட்டன் அவர்களைத் தேற்றிப் புறப்படுதல்

"வாரேனென்று சொன்ன பெண்களே ஒன்றுக்கும் மலையாமல்[38]
இருங்கோ
மாற்றானிடம் போய் வெட்டியடக்கியே வந்துவிடுவேனெடியில்

கள்வர்களைக் கண்டு பட்டன் போர் புரிதல்

சண்டைக்குப் போகிறான் இந்திரசித்தைபோல் சுவாமி முத்துப்
பட்டனும்
சந்திரகாவி உருமால் தலைக்கட்டும் சுங்கல் சருகைமுந்தி
காலில்கொலுசுடன் வீரமணித்தண்டை கையிலே பாசிபந்து

கழுத்திலே மோகனமாலையும் நல்லகருத்த உடுப்புமிட்டு
காட்டுபாதைவர சீங்குழலூதியே கண்டான் பசுமாட்டை
மாட்டைக்கண்டோடி மறித்து பட்டனவன் மட்டிமல்லா போரு
செய்து
வளையவளையத் தடிகொண்டு வீசியே வன்னியரை யொதுக்கி
திரையோடே மாட்டை தளுக்குதிட்டையில் சேர்த்துமே
முத்துப்பட்டன்
சிங்கம்போல்வந்து வன்னியர்கூட்டத்தில் திக்கென பேர்
புரிந்தான்

போர்க் காட்சி

தரு

வாள்கொண்டு வெட்டிமடிந்தார் சிலபேர்
வல்லயத்தில் குத்தி மாண்டார் சிலபேர்
ஊளையிட்டுக் கொண்டுருண்டார் சிலபேர்
ஒதுங்கி அடிபட்டிறந்தார் சிலபேர்
மட்டுமடிந்து கிடப்பார் சிலபேர்
பட்டபின் வெட்டாதே என்றார் சிலபேர்
கட்டாரிகொண்டு சிலபேர் தன்னை
பொட்டியும் பேறும் அத்தது சிலபேர்
கையற்று மெய்யற்று போனார் சிலபேர்.

ஒளிந்திருந்த ஒருவன் பட்டனைக் குத்துதல்

வேறு

இப்படிவெட்டி மடிவதைக் கண்டு
இருண்ட செடிக்குள் ஒளிந்து இருந்தான்
தப்பிப்பிழைத்தங் கொருத்தனிருக்க
சுவாமி முத்துப்பட்டன் சந்தோஷமாக
அப்படியே பூச்சிநாயும் பிடித்து
ஆற்றல் வந்தவன் கையை அலம்ப
சப்பாணி நொண்டி ஒளித்தவன் றானும்
சுவாமி முத்துப்பட்டனைக் குத்தினனே

தன்னைக் குத்தியவனைக் கொன்றுவிட்டு
பட்டன் உயிர்விடுதல்

குதித்தோட மாறி அவனையும் குத்த
கோரையாறு தனிலே பட்டுவிழுந்தானே
கோடை மலையதுபோல் முத்துப்பட்டன்
ஓடைக் கரையதிலே பட்டு இறந்தான்

### பட்டனின் நாய் வீட்டுக்கு ஓடுதல்

விருத்தம்

பட்டிநாய் ஊளையிட்டு சுவாமிமேல் புரண்டழுது
கட்டின கயத்தோடே காடெல்லாம் திரிந்துஓடி
மட்டில்லாத துயரங்கொண்டு வாய்திறந் தூளையிட்டு
முட்டியே குலைத்துக்கொண்டு முந்திநாய் வருகுகென்றே

### பட்டனின் மனைவியர் கனவு கண்டு புலம்புதல்

நாய்வருவதற்கு முன் சேர்க்கையாய் ரெண்டுபெண்கள்
பாயதி லுறங்கும்போது பாதகமாய்க் கவுகனண்டு
தாய்தந்தை இறந்ததென்று தவிப்பதுபோல்
கூவியே அழுதுபெண்கள் கூப்பிட்டுத்தான் சொல்வாளே
"அக்கா நீ கேள் நானும் அசந்து[39] உறங்கையிலே
கச்சமாகவல்லோ கண்டகினு கணவனுக் காகாது
பக்கத்திலே ஒளிந்தொருவன் பதுங்கி யிருந்திடவும்
அப்புறம் ஓடிவந்தே கணவனைக் குத்திடக்கண்டேனுன்
சக்கரம்போல் சுழன்று மன்னவன் தண்ணீர்க்கரை யதிலே
குப்புறவே விழுந்தயிடத்தில் குடலும் சரியக்கண்டேன்
மலையில் புலிகளும் நம்மன்னவனுக்கு துணையாகி
கழுகும் ஒருநரியும் மன்னவனைக் காத்திடக்கண்டேன் யான்
கள்ளியும் கல்லடியும் சிலகாட்டில் மிருகங்களும்
கொள்ளிவாய்ப் பேய்கள் வந்து பந்தம் கொளுத்திடக்
கண்டேனுன்
தாலிமடை[40]முறிந்து தெருவினில் தானே விழுந்திடவும்
வருக்கைபலா மரமுறிந்து மலையில் விழவுங்கண்டேன்
குடிசையில் தீப்படவும் கொட்டாரம் வைக்கக் கண்டேன்".

### பட்டனைத்தேடி மனைவியர் இருவரும் புறப்படுதல்

விருத்தம்

இவ்விதஞ் சொப்பனங்கள் இயல்பறக் கண்டபெண்கள்
"தையலே எனக்குப்புத்தி சஞ்சல மாகுதிப்போ
ஐயையோ சிவனேயிப்போ ஆண்துணைக் கொருபேரில்லை
பையவே போவோமெ"ன்றார் பைங்கொடி ரெண்டுபேரும்
சாயலை அறியவென்று சமர்த்துள்ள பூச்சிநாயும்
நாய்வந்து காலைக்கட்டி நடுங்கியே மூச்செறிந்த
வயலைக்கண்டு பெண்கள் சதியேது கோரையேது
போயுமே பார்க்கவேணும் புறப்படு எனது தங்கை

## மனைவியரிருவம் காட்டுவழியில் புலம்பிச் செல்லுதல்

### தரு

முன்னாலே ஒடுது பூச்சிநாய்தானும் முணங்கியே வால் சுருட்டி
பின்னாலே வாராரே பெண்கள்ரெண்டுபேரும் மரிந்து வழி
பார்த்து
மன்னனுடைய தடந்தான்இந்த வழியிலே காணோமே
என்னமாய்ப்போய் மனந்தரித்து இருப்போமிந்நேரம்
பட்டப்பகல் போலிருந்தாலுமிந்த பாதை தெரிந்திரிந்திடுமே
பட்சி பறவைகளே[41] கணவனை பார்த்திட்ட பேரில்லையா
பொத்தைகளே[42] செத்தைகளே[43] மலைப்புல்லுகளே நீங்கள்
மெத்தமயங்கிற பேருக்கு ஒத்தாசை செய்யொண்ணாத
மண்ணே மலையே மரமே மேடே வனத்தில் மிருகங்களே
கண்ணனமன்னவன் இப்போனதை கண்ணாலே கண்டீர்களோ
காடை கருவாளி காட்டிலுள்ள செண்பகமே
மாடப்புருப்போல் எந்தன் மன்னனைக் கண்டீர்களோ?
ஆலமரமே அழகுள்ள பிலாமரமே
மாலையிட்டுவந்த எந்தன் மன்னனைக் கண்டீர்களோ?
அத்திமரம் வேங்கை அழகுள்ள தேக்குமரம்
புத்தியுள்ள கணவன் யிவ்வழிபோனதை காணீர்களோ?
இந்தவனத்திலே யிருந்து இரவினில் சஞ்சரிக்கும்
பன்றிகளே நீங்கள் எந்தன் மன்னனைக் காணீர்களோ?
கூவுங் குயிலன்னமோ கொத்திய புல்லுகளே
சேவலும் பேடைகளே மன்னவன் செல்வதைக் காணீர்களோ
சிம்மமே கடுவாயே புலியே சிறிய கரடிகளே
அங்கம் பறக்குது என் கணவன்போன அடவியைக்
காணீர்களோ?
கூகையே ஆந்தைகளே குதிச்சு மேய்கின்ற புல்வாயே
புனுகுப்பூனை வெருகே முன்னே சாடிபோற மானினமே[43]
அழுகைக் குரல்கேட்டால் மன்னனை அழைத்துமே வாரீர்களோ
பூச்சியாய் ஓடி முன்னாலே நீ மூச்சு முயற்றுகிறாய்
வாச்சுதே அன்றைக்கு போச்சுதே யிப்படி ஆச்சுதென்னமாயம்
மன்னவன் எங்கேயிருக்கார் நாயே நீயும் ஆவியே ஓடுகிறாய்

## இறந்துகிடக்கும் பட்டனைக் கண்டு அழுது புலம்புதல்

கண்ணன மன்னவன் செத்துக்கிடப்பதை கண்டாரே பெண்கள்
வந்து
அடித்து விழுந்தாளே இமையாத புழுதியிலே
சட்டியும் சோத்தையுந்தான் சங்கடமா விட்டெறிந்தாள்
இடித்தாள் வயிற்றினிலே யீரல் கலங்கிடவே

வாரியெடுத்தாளே மாரோடே அணைத்தாளே
"பொட்டும் அழியலையே போட்டகுறி மங்கலையே
சற்றே கருங்கலையே சாமிமுகம் வாடலையே
செருப்பிட்ட காலத்திலே சிந்திரெத்த மாவானேன்"
முகத்தோடே முகம் வைத்து முத்தமிட்டுக்கொண்டழுதாள்
"நாலு கழியலியே நாலாநீர் கூடலையே
ஏழு கழியலியே ஏழாநீர் கூடலையே.
தாலிகொண்டுவந்த தந்த தட்டானும் போகலையே.
மாலை கொண்டுவந்த பண்டாரமும் போகலையே
கொட்டி பறையனுக்கு கொத்துக் கொடுக்கலையே
கோண மணவறையில் குந்தவைத்த தோஷமுண்டு
வட்ட மணவறையில் வந்திருந்த தோஷமுண்டு.
பொருந்தி யிருந்தோமோ பிள்ளைகளை பெற்றோமோ.
பணியாரம் சுட்ட சட்டி பாதிமணம் போகலையே
பந்தல் பிரிக்கலையே வந்த ஜனம் போகலையே.
என் கணவா என்கணவா யிந்தவிதி வருவானேன்?
சண்டாள வன்னியர்கள் சதித்தாரே கணவனைத்தான்
பசலை தலையிலேதான் பாரயிடி விழுவானேன்?
குழந்தை தலையில்தான் குடிகேடு வருவானேன்?
பார்த்தாளோ பார்த்தாளோ பாம்புக்கண்ணி பார்த்தாளோ
குண்டு கண்ணி சக்களத்தி குறிப்பாக பார்த்தாளோ?
ஆணழக னென்று எந்த அடியறுவாள் பார்த்தாளோ?
உண்டேனே உன்சோறு உடுத்தேனே உன் புடவை
தின்றேனே உன்பாக்கு சேர அணைந்தேனே
மஞ்சள் புடவையதை மடித்து உடுத்தும் நாளையிலே
கஞ்சிப் புடைவையைக் கழுத்திலிட நாளாச்சே"

பட்டனுடன் உடன்கட்டை ஏற விரும்பி மனைவியரிருவரும்
சிங்கம் பட்டி ஜமீன்தாரிடம் உத்தரவு கேட்டல்

என்று சொல்லிப் பெண்கள் ஏற்றதொரு கணவனைத்தான்
தூக்கி மலையோரம் சூதானம் தான்படுத்தி
உன் கட்டை யேறுவதற்கு உத்தரவு வேண்டவென்று
சிங்கம் பட்டி அரண்மனையில் தீகேட்க வேணுமென்று
ஏழுமலை கடந்து வாராளே பெண்கொடியாள்
மணி முத்து ஆறுவிட்டு வனத்தோடே தானும் வந்து
சிங்கம்பட்டி அரண்மனையும் சீக்கிரமே ஓடிவந்து
"சிங்கரவன் ராஜாவே தீப்பாயப் போறோமே
உத்தரவு தான்வேணும் உடன்கட்டை ஏறுவதற்கு
தடங்கல் செய்யவேண்டாம் சுவாமி அனுப்பிவிடும்"

அனுப்பிவிடு மென்றபோது "அய்யய்யோ சிவனேயிந்த
மனுக்களி லிவரைப் போல் வடிவத்தைக் கண்டதில்லை
அனுப்புவதற்கு என்ன செய்வோம் ஆரடி பெண்கள் நீங்கள்
எனக்குமே இவர்தானுரு உண்மையைச் சொல்லு மென்றார்"
"சோல்லுமே யென்றுரைத்தீர் மன்னு துணைவனு முயர்குலந்தான்
வல்லமை யாகவேதான் மணஞ்செய்தா ரெங்களைத்தான்
கள்ளரோடு யுத்தஞ்செய்து என் கணவரு மாண்டுவிட்டார்
வள்ளலின் பாதஞ்சேர வரம்தர வேணும் நாதா"

ஜமீன்தாரின் தீய ஆசை

"பெண்கள் நீங்கள் சாகவேண்டாம் சொன்ன புத்திதனை சற்றே
கேளும்
மங்களமதாக எந்தன் வர்ணநல்ல அரண்மனையில்
சங்கடத்தை விட்டு நீங்கள் சந்தோஷமாகி யிருங்கோ பெண்டு
காள்
நித்தமொரு பட்டுத்தி நினைத்தபடி பூ முடித்து
ஏற்றநல் பணியணிகள் உல்லாச மெத்தவுண்டும் பெண்கள்
பாயாசஞ்சோறு மருந்தி பாக்கு வெத்திலையுந் தின்று
சீலமுள்ள பெண்களுடன் சென்றிருங்கோ இன்றுமுதல்
மேனி நனையாமல் வேறு முகங் காணுமல்
சேனை தளம் சூழ்ந்திருக்கச் சிங்கா தனத்தி லிருங்கோ"

ஜமீன்தார் உத்தரவு கொடுக்க பெண்களிருவரும்
உடன் கட்டை ஏறல்

அந்த மொழிதனைக் கேட்டு அலறி அபயமிட
"எங்களுடைய தலைதனிலே எழுதிவிட்டான் ஈஸ்வரனும்
மங்கிலியப் பெண்கள் நம்மை நகைப் பாரே
வாலைபகடை நம்மை இதற்கோ வருந்திப் பெற்முன்
சங்கடத்தைப் பார்ப்பதற்கோ சண்டாளி போய்வாரோம்"
என்றவர் சொல்ல துரையவர் கேட்டு
உற்றதோர் பூப்பந்தல் நேர்த்தியாய்க் கட்டி
மந்தாரை பிச்சியும் செண்பகப்பூவும் மாலையும் கொடி
விதானங்கள் செய்து
கெந்தக பரிமள வாசத்துடனே கெம்பீரமாய் முத்துப்பட்டனை
வைத்து
அக்காளும் தங்கையும் வாராளே பத்தினி நையாண்டி கொட்டி
குரையுமிட்டு
நன்மையாகவே கட்டிடத்தில் வைத்து சந்தனக்கட்டை விறகு
அடுக்கி

சாந்து புனுகு பன்னீர் பூசி அந்த நல்லகட்டையில் பெண்களும்
வந்து

அக்காளும் தங்கையும் பட்டணயதிலே கிடந்தி
தந்து கருமாதி தன்னையும் முடித்து மாலை கழற்றி நிலத்தி லெறிந்து
சந்திரன் சூரியன் சாக்ஷிகள் வைத்து தானுமே கட்டையிலேறினர்
பெண்கள்.

இந்தர தேவர்கள் மூவர்கள் சூழ எம்பெருமானும் பொன்னம்
பலம் விட்டு
தரமாகவே தேவியுடனே ஆகாச மார்க்கத்தில் வந்தவர் பார்க்க
சுந்தர பெண்களிரு பேருங்கூடி தோத்திரஞ் சொல்லி வாழ்த்திடு
வாரே.

வர்ழி! வாழி! ! என்றும் ஈஸ்வரனர் வாழியவே ! ! !

(முற்றிற்று)

## குறிப்புகள்

1. அத்திமுகன் - யானை முகத்தோன் கணபதி பக்கம் 31

2. நாடதிலே - தென்காசிக்கு மேற்கும் சங்கரன் கோயிலுக்கு தெற்கும் உள்ள பகுதி. பக்கம் 31

3. லிங்கப்பட்டன் - அண்ணன் பட்டன் முதல் சோமலிங்கப் பட்டன்வரை முத்துப்பட்டனின் தமையன்களின் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன. பக்கம் 31

4. ஏத்தன் - ஏற்றன், உயர்ந்தவன் பக்கம் 31

5. மல்லடவு - மல்வித்தை பக்கம் 31

6. வஸ்துவகை - சொத்து வகை (வஸ்து- நாஞ்சில் நாட்டில் சொத்து என்ற பெயரில் வழங்கி வருகிறது. பக்கம் 31

7. சுனை - புண்ணிய தீர்த்தம் பக்கம் 32

8. எத்தரிய - புகழ்ச்சிக்குரிய பக்கம் 32

9. மனுவெழுது - உடலுழைப்பைவிட, எழுத்தாணி கொண்டு எழுதிப் பிழைப்பது உயர்ந்தது என்ற எண்ணம் தோன்றிய மனுவெழுதினால் 4000 பொன் சம்பளம் பெறலாம் என்ற காலத்தில் நம்பிக்கை இருந்தது. பக்கம் 32

10. சோதிமுத்து – முத்துப்பட்டன் பக்கம் 33

11. சாளியல் சாளியலாய் - குவியல் குவியலாய் (நாஞ்சில் நாட்டு வழக்கு) பக்கம் 33

12. திருவாரியன் - ஆரியங்காவு என்னும் ஊரிலுள்ள கோவிலின் சிவலிங்கம் பக்கம் 34

13. திருநீலகண்டன் - இது ஒரு சக்கிலியத் தலைவனின் பெயர். இப்பிரதேசங்களில் அவன் தலைவனாயிருந்தானென்று சிங்கம் பட்டி ஜமீன் செவிவழி வரலாறுகளிலிருந்து தெரிய வருகிறது. பக்கம் 34

14,15,16,17, இடப்பெயர்கள். பொதிகைமலைப் பகுதியில் இன்றும் இப்பெயர்களில் இடங்கள் வழங்கி வருகின்றன. பக்கம் 34

18. கிடை - திறந்த வெளியில் ஆடுமாடுகளை அடைத்து வைக்கும்பட்டி பக்கம் 35

19. பரியாசம் - பரிகாசம், பகடி பக்கம் 35

20. இன்னுபிடி - என்று சொல்லிக் கொண்டு பந்தய ஓட்டம் தொடங்குவதுண்டு. இது நெல்லை மாவட்ட வழக்கு. பக்கம் 37

21. பொத்தை - சிறுகுன்று (நெ.மா. வழக்கு) பக்கம் 37

22. கோரணி - கேலி பக்கம் 37

23. வல்லயம் - ஈட்டி போன்றதோர் ஆயுதம் பக்கம் 37

24. வார - வருகிற (நெ. மா. வழக்கு) பக்கம் 37

25. விடக்கு - பிணம், இறைச்சி பக்கம் 37

26. அடியறுத்தல் - செருப்பு செய்ய காலுக்கு அளவாக தோலை வெட்டுதல் பக்கம் 39

27. வகைக்கு வருமோ - நடைமுறைக்கு வருமோ (நாஞ்சில் நாட்டு வழங்கு)

28. கற்பனை - கட்டளை (மலையாளம்)

29. அகரம் - பார்ப்பணர் குடியிருப்பு பக்கம் 40

30. குடும்பி - குடுமி (நெ. மா. வழக்கு) பக்கம் 40

31. அத்து - அற்று (அறுந்து) பக்கம் 40

32. ஏத்த - ஏற்ற பக்கம் 41

34. பகடைகளின் பெயர்கள் வரிசையாகச் சொல்லப்படு கின்றன. இது போல முக்கூடற்பள்ளில், நெல்வகை, மாட்டு வகை, பள்ளியல் பெயர் இவை வரிசையாகச் சொல்லப்படு

கிறது. இது உலகமெங்கும் காணப்படும் நாட்டுப்பாடல் மரபு. ஹோமர், கம்பன் முதலிய காப்பியக்காரர்கள் இம் மரபைப் பின்பற்றுவதைக் காணலாம் பக்கம் 42

35. கடுவாயது - வேங்கைப்புலி பக்கம் 42

36. விருகு - வெருகுப்பூனே. பூனேயைவிட சற்றுப் பெரிய பிராணி. கோழிகளே இரையாக கவர்ந்து செல்லும் "வெருகு இருள் நோக்கியன்ன" [அகம் 73]

பக்கம் 43

37. உப்பரங்கோட்டை - உக்கிரன் கோட்டை என்னும் ஊர் பக்கம் 43

38. மலேயாமல் - திகைக்காமல் பக்கம் 43

39. அசந்து - அயர்ந்து பக்கம் 44

40. தாலிமடை - தாளப்பூட்டு பக்கம் 45

41. "பட்சிப் பறவைகளே கணவனே பார்த்திட்ட பேரில்லேயா" என்பது முதல் "புனுகுப்பூனே வெருகே முன்னே சாடி போற மானினமே" முடிய கானகத்திலுள்ள மிருகங்கள் பறவைகள், மரங்கள் ஆகியவைகளே நோக்கி இப்பெண்கள் புலம்புவது போல் அமைந்துள்ளன. கம்பராமாயணத்திலும் இராவணன் சீதையைக் கவர்ந்து செல்லும் போது சீதை இது போல் மிருகங்களேயும், பறவைகளேயும், ஆறுகளேயும் விளித்து புலம்புகிருள். பக்கம் 46

42. பொத்தை - மேட்டுப் பாங்கான பகுதி, சிறிய குன்று. பக்கம் 46

43. செத்தை - சருகு பக்கம் 46

44. "மலேயே! மானே! மயிலே! குயிலே!
கலேயே! பினேயே! களிறே! பிடியே!
நிலேயா! உயிரே; நிலேறே! டினிர்போய்
உலேயா வலியார் உழைநீர் உரையீர்!"

'முந்தும் சுனேகாள்! முழைவாழ் அரிகாள்!
இந்தந் நிலனே டும்எடுத்த கைகால்
ஐந்தும் தலேபத் தும்அலேந்து உலேயச்
சிந்தும் படிகண் டுசிரிக் கிலிரோ?'

பக்கம் 46